يا باغي الخير اقبل
Come On For Charity

# இஸ்லாமும் அதற்கு முரணானவையும்

# العقيدة الصحيحة

The Cooperative Office For Call & Guidance to Communities at Rawdhah Area
Under the Supervision of Ministry of Islamic Affairs and Endowment and Call and Guidance - Riyadh - Rawdhah
Tel. 4918051 Fax 4970561 - P.O. Box 87299 Riyadh 11642

تاميلي
٦٤

# இஸ்லாமும்
# அதற்கு முரணானவையும்

ஆசிரியர்
**அஷ்ஷெய்க் அப்துல் அஜீஸ் பின் அப்துல்லாஹ் பின்பாஸ்.**
(இஸ்லாமியக் கல்வி ஆராய்ச்சி, மார்க்கத் தீர்ப்பு, மார்க்க அழைப்பு பிரச்சாரப் பணியகத் தலைவர்)

தமிழாக்கம்
M. முஹம்மது யூசுப் மிஸ்பாஹி,
(பொட்டல் புதூர் – இந்தியா).

# இஸ்லாமிய அடிப்படைக் கொள்கையும் அதற்கு முரணானவையும்

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் ஆரம்பம் செய்கிறேன்.

புகழனைத்தும் அவனுக்கே உரியது. அண்ணல் நபி(ஸல்) அவர்கள் மீதும் அவர்களது கிளையினர், தோழர்கள் மீதும் சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக.

மிகச் சரியான இஸ்லாமிய அடிப்படைக் கொள்கைப்படி, சொற்களும் செயல்முறைகளும் தோன்றினால் தான், அவை இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படும் என்பது அல்குர்ஆன், அல்ஹதீஸின் ஆதாரங்களைக் கொண்டு அறியப்பட்டதாகும், இந்த அடிப்படைக் கொள்கைப்படி அமையாத சொல் செயல்கள் வீணானவையே.

அல்லாஹ் கூறுகின்றான்:— மேலும் எவர் ஈமானை நிராகரிக்கிறாரோ, அவருடைய செயல் அழிந்து போகும். மேலும் அவர் மறுமையில் நஷ்டமைந்தோருள் ஒருவராகவே இருப்பார்.

(அல்குர்ஆன் 5:5)

மேலும் அல்லாஹ் கூறுகின்றான்:—

அன்றியும் உமக்கும், உமக்கு முன் இருந்தவர்களுக்கும் வஹீமூலம் உறுதியாக அறிவிக்கப்பட்டது என்னவெனில், "நீங்கள் (அல்லாஹ்வுக்கு) இணை வைத்தால் உங்கள் நன்மைகள் (யாவும்) அழிந்து நஷ்டமடைபவர்களாகி விடுவீர்கள் (என்பதுவேயாகும்)

(அல்குர்ஆன் 39:65)

இதே கருத்தைக் கொண்ட இன்னும் பல வசனங்கள் இருக்கின்றன. அல்லாஹ்வை நம்புவது அவனது மலக்குகளை

நம்புவது, அவனால் அனுப்பப்பட்ட வேதங்களை நம்புவது, அவனது தூதர்களை நம்புவது, மறுமை நாளை நம்புவது, நன்மையும் தீமையும் விதியைப் பொறுத்ததே என நம்புவது ஆகியவை இஸ்லாமிய அடிப்படைக் கொள்கையில் உள்ளடங்கியவை.

அல்லாஹ் இறக்கி அருளிய உயர்வேதமும் அல்லாஹ் அனுப்பிய தூதர் நபி(ஸல்) அவர்களின் அருள் மொழிகளும், இந்த ஆறு விஷயங்கள் தாம் இஸ்லாமிய அடிப்படைக் கொள்கைகள் என அறிவிக்கின்றன.

மறைவான விஷயங்களிலிருந்து நம்பிக்கை கொள்ளவேண்டியவையும் அல்லாஹ்வும் அவனது தூதரும் அறிவித்த மற்ற அனைத்து விஷயங்களும் இந்த அடிப்படைகளிலிருந்தே தோன்றுகின்றன. இந்த ஆறு அடிப்படை விஷயங்களின் ஆதாரங்கள் குர்ஆனிலும் நபிவழிகளிலும் மிக அதிகமாகக் காணப்படுகின்றன. அவற்றுள் சில:

புண்ணியம் என்பது உங்கள் முகங்களைக் கிழக்கிலோ மேற்கிலோ திருப்பிக் கொள்வதில் இல்லை; மாறாக புண்ணியம் என்பது அல்லாஹ்வின் மீதும் இறுதி (த்தீர்ப்பு) நாளின் மீதும் மலக்குகளின் மீதும் வேதங்களின் மீதும், நபிமார்கள் மீதும் நம்பிக்கை கொள்ளுதல் (ஆகும்).

(அல்குர்ஆன் 2:177)

இன்னும் அல்லாஹ் கூறுகின்றான்:
இறைத்தூதர் தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பட்டதை நம்புகிறார். (அவ்வாறே) முஃமின்களும் (நம்புகின்றனர் இவர்கள்) யாவரும் அல்லாஹ்வையும் அவனுடைய மலக்குகளையும் அவனுடைய வேதங்களையும் அவனுடைய தூதர்களையும் நம்புகிறார்கள். நாம்

இறைத் தூதர்களில் எவர் ஒருவரையும் பிரித்து வேற்றுமை பாராட்டுவதில்லை" (என்று கூறுகிறார்கள்).

(அல்குர்ஆன் 2:285)

மேலும் அல்லாஹ் கூறுகின்றான்:
முஃமின்களே! நீங்கள் அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர் மீதும் அவருக்கு அவன் இறக்கிய (இவ்) வேதத்தின் மீதும் நம்பிக்கை கொள்ளுங்கள். எவர் அல்லாஹ்வையும் அவனுடைய மலக்குகளையும் அவனுடைய வேதங்களையும் அவனுடைய தூதர்களையும் இறுதி நாளையும் (நம்பாமல்) நிராகரிக்கிறாரோ அவர் வழிகேட்டில் வெகு தூரம் சென்றுவிட்டார்.

(அல்குர்ஆன் 4:136)

அல்லாஹ் கூறுகின்றான்:– நிச்சயமாக அல்லாஹ் வானத்திலும் பூமியிலும் உள்ளவற்றை நன்கு அறிகிறான் என்பதை நீர் அறியவில்லையா? நிச்சயமாக இவை(யனைத்தும்) ஒரு புத்தகத்தில் (பதிவு செய்யப்பட்டு) இருக்கின்றன. நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிகவும் சுலபமானது.

(அல்குர்ஆன் 22:70)

இந்த அடிப்படை விஷயங்களை அறிவிக்கின்ற ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களும் ஏராளம் உள்ளன. அவற்றுள் பிரபல்யமான ஒன்றுதான் முஃமின்களின் தலைவரான உமர்(ரழி) அவர்கள் மூலம் அறிவிக்கப்பட்டு முஸ்லிமில் பதிவாகியுள்ள (பின்வரும்) நபிமொழியாகும்:–

ஜிப்ரில்(அலை) அவர்கள், நபி(ஸல்) அவர்களிடம் ஈமானைப் பற்றிக் கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், "அல்லாஹ்வை நம்புவதும், அவனுடைய வானவர்களையும், அவனுடைய வேதங்களையும்

அவனால் அனுப்பப்பட்ட தூதர்களையும், இறுதி நாளையும் நல்லதும் தீயதும் கத்ரு எனும் விதியைக் கொண்டு தான் என நம்புவதும் ஈமான் ஆகும்" எனச் சொன்னார்கள். இந்த ஹதீஸை புகாரி முஸ்லிம் ஆகிய இருவரும் அபூஹுரைரா(ரழி) அவர்கள் மூலமும் பதிவு செய்துள்ளனர்.

இந்த ஆறு அடிப்படை விஷயங்களில் இருந்தே அல்லாஹ்வைப் பற்றியும், மறுமை நாள் பற்றியும், மறைவான விஷயங்கள் பற்றியும், ஒரு முஸ்லிம் நம்பவேண்டிய எல்லாமும் தோன்றுகின்றன.

### *1. அல்லாஹ்வை நம்புதல்:*

வணங்குவதற்கு மிகமிகத் தகுதிவாய்ந்தவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாருமே இல்லை என நம்புவதே அல்லாஹ்வை ஈமான் கொள்வதாகும். ஏனெனில் அடியார்களைப் படைத்தவன் அவனே; அவர்களுக்கு நன்மை செய்வோனும் அவனே; அவர்களுக்குத் தேவையான உணவுகளை முறைப்படி வழங்குவோனும் அவனே அவர்களது மறைவான மற்றும் வெளிப்படையான விஷயங்களையெல்லாம் அறிபவனும் அவனே; அவனுக்கு வழிப்படுவோருக்கு நற்கூலி கொடுப்பவனும், பாவிகளுக்குத் தண்டனை அளிப்பவனும் அவனே. மனித ஜின் இனத்தைப் படைத்தது தன்னை வணங்குவதற்காகவே என்று அல்லாஹ் குறிப்பிடுகின்றான்.

இன்னும் ஜின்களையம் மனிதர்களையும் அவர்கள் என்னை வணங்குவதற்காகவேயன்றி நான் படைக்கவில்லை; அவர்களிடமிருந்த எந்தப் பொருளையும் நான் விரும்பவில்லை; எனக்கு அவர்கள் உணவளிக்க வேண்டுமென்று நான் விரும்பவில்லை; நிச்சயமாக அல்லாஹ்தான் உணவளித்துக் கொண்டிருப்பவன்; பலம் மிக்கவன்; உறுதியானவன்.

(அல்குர்ஆன் 51:56,57,58)

மேலும் அல்லாஹ் கூறுகின்றான்:

மனிதர்களே! நீங்கள், உங்களையும் உங்களுக்கு முன் இருந்தோரையும் படைத்த உங்கள் இறைவனையே வணங்குங்கள். (அதனால்) நீங்கள் தக்வா (இறையச்சமும் தூய்மையும்) உடையவர்களாகலாம். அவனே உங்களுக்காக பூமியை விரிப்பாகவும் வானத்தை விதானமாகவும் அமைத்து வானிலிருந்து மழை பொழியச் செய்து; அதன் மூலம் உங்கள் உணவிற்காக கனி வர்க்கங்களை வெளிவரச் செய்கிறான். எனவே நீங்கள் அறிந்து கொண்டே இருக்கும் நிலையில் அல்லாஹ்வுக்கு இணைகளை ஏற்படுத்தாதீர்கள்.

(அல்குர்ஆன் 2:21,22)

இந்தப் பேருண்மையினை விளக்கவும், இதன் பக்கம் மக்களை அழைக்கவும் இதற்கு முரணானவை பற்றி எச்சரிக்கவும்தான் அல்லாஹ், இறைத் தூதர்களை அனுப்பி வேதங்களை இறக்கி அருளினான். இது பற்றி அல்லாஹ் கூறுகின்றான்.

மெய்யாக நாம் ஒவ்வொரு சமூகத்தாரிடத்திலும், "அல்லாஹ்வையே நீங்கள் வணங்குங்கள். ஷைத்தான்களை விட்டும் நீங்கள் விலகிச் செல்லுங்கள்" என்று (உபதேசிக்குமாறு) நம் தூதர்களை அனுப்பி வைத்தோம்.

(அல்குர்ஆன் 16:36)

இன்னும் அல்லாஹ் குறிப்பிடுகின்றான்:

(நபியே!) உமக்கு முன்னர் நாம் அனுப்பிய ஒவ்வொரு தூதரிடமும் நிச்சயமாக (வணக்கத்திற்குரிய) நாயன் என்னைத் தவிர வேறு எவருமில்லை; எனவே என்னையே நீங்கள் வணங்குங்கள் என்று நாம் வஹீ அறிவிக்காமல் இல்லை.

(அல்குர்ஆன் 21:25)

மேலும் கண்ணியத்திற்கும் உயர்விற்கும் உரிய அல்லாஹ் சொல்கிறான். இது வேதம் ஆகும். இதன் வசனங்கள் (பல்வேறு அத்தாட்சிகளால்) உறுதியாக்கப் பெற்றுப் பின்னர் தெளிவாக விவரிக்கப் பெற்றுள்ளன. மேலும் (இவை யாவற்றையும்) நன்கறிபவனும் ஞானம் மிக்கோனுமாகிய (இறை)வனிடம் இருந்து (வந்து)ள்ளன. நீங்கள் அல்லாஹ்வையன்றி (வேறு எதனையும்) வணங்காதீர்கள். நிச்சயமாக நான் அவனிடமிருந்து உங்களுக்கு அச்ச மூட்டி எச்சரிப்பவனாகவும் நன் மாராயம் கூறுபவனாகவும் (அனுப்பப்பட்டு) இருக்கின்றேன்.

(அல்குர்ஆன் 11:1,2)

அடியார்களின் எல்லா வணக்க வழிபாடுகளும் அல்லாஹ்வுக்கு மட்டுமே ஆகியிருப்பதுதான் இந்த வணக்கங்களின் உண்மை நிலையாகும். அது துஆக் கேட்பதானாலும், பயப்படுவது என்றாலும், ஆதரவு வைப்பதாக இருந்தாலும், தொழுகை, நோன்பு, அறுத்துப் பலியிடுதல், நேர்ச்சை செய்தல் ஆகிய இன்ன பிற வணக்க வழிபாடுகளாக இருந்தாலும் சரியே. வணக்கங்களில் அவனையே பணிதல் வேண்டும். அவனையே பிரியம் வைக்க வேண்டும். அவனையே அஞ்சவேண்டும்; அவனது ஒப்புயர்வற்ற கண்ணியத்திற்கு முன்னால் தாழ்ந்து ஆசையுடன் செயல்புரியவேண்டும்.

அல்குர்ஆனின் பெரும்பகுதி இந்த அடிப்படையின் மீது தான் இறக்கி அருளப் பெற்றுள்ளது என்பது பின்வரும் வசனங்கள் மூலம் தெளிவாகிறது.

ஆகவே மார்க்கத்திற்கு அந்தரங்க சுத்தியுடையவராக நீர் அல்லாஹ்வை வணங்குவீராக, அறிந்து கொள்வீராக. களங்கமற்ற மார்க்க (வழிபாடுயாவும்)ம் அல்லாஹ்வுக்கே உரியது.

(அல்குர்ஆன் 39:2,3)

**மேலும் அல்லாஹ் கூறுகின்றான்.**

**அவனையன்றி (வேறு எவரையும், எதையும்) நீர் வணங்கலாகாது என்றும்.......... உம்முடைய இறைவன் விதித்திருக்கின்றான்.**

**(அல்குர்ஆன் 17:23)**

**இன்னும் அல்லாஹ் கூறுகின்றான்:**

**ஆகவே காஃபிர்கள் வெறுத்த போதிலும் முற்றிலும் அவனுக்கே நீங்கள் வழிபட்டு, மார்க்கத்தில் பரிசுத்தமாக அல்லாஹ் ஒருவனையே (பிரார்த்தித்து) அழையுங்கள்.**

**(அல்குர்ஆன் 40:14)**

மேலும் "அல்லாஹ்வுக்கு அடியார்கள் செய்யவேண்டிய கடமை அவனை மட்டுமே வணங்குவதும், எதையும் அவனுக்கு இணை ஆக்காதிருப்பதும் ஆகும்". என நபி(ஸல்) அவர்கள் கூறியதாக முஆத்(ரழி) அவர்கள் மூலம் புகாரி, முஸ்லிமில் பதிவாகியுள்ளது.

மேலும் அடியார்கள் மீது அல்லாஹ் கடமை ஆக்கிய வெளிப்படையான ஐந்து விஷயங்களை நம்புவதும் அல்லாஹ்வை ஈமான் கொள்வதில் உள்ளதே. அவையாவன: வணங்குவதற்குத் தகுதியானவன் அல்லாஹ் ஒருவன் தான் என்றும், முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் எனவும் சாட்சி கூறுவது, தொழுகையை நிலை நிறுத்துவது, ஜகாத் கொடுப்பது, ரமலானில் நோன்பு நோற்பது, அல்லாஹ்வின் வீடாகிய கஃபா வரை யாருக்குச் சென்று வர வசதிகள் உண்டோ அவர் ஹஜ் செய்வது மற்றும் பரிசுத்தமான ஷரீஅத் அருளிய ஏனைய கடமைகள் ஆகியனவாகும்.

வணக்கத்திற்குத் தகுதியானவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாருமில்லை; முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத்

தூதர் என சாட்சி பகர்வதே இந்த வணக்கங்களும் முக்கியமானதும் உயர்ந்ததும் ஆகும்.

'லா இலாஹ இல்லல்லாஹ் என்று சாட்சி பகர்வது வணக்கங்கள் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே செய்யப்படவேண்டும் எனவும் அவனைத் தவிர உள்ள அனைத்தையும் விட்டு வணக்கத்தை விலக்க வேண்டும் எனவும் வேண்டி நிற்கிறது. இது தான் லாயிலாஹ இல்லல்லாஹ் என்பதன் பொருளாகும். இன்னும் விரிவாகச் சொல்வதென்றால், உண்மையில் வணங்கப்படத் தகுதி படைத்தவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாரும் இல்லை; அவனைத் தவிர வணங்கப்படுகிற மனிதர்கள், வானவர்கள், ஜின்கள் மற்றும் உள்ள அனைத்தும் தவறான கடவுள்களாகும். வணங்கப்படுவதற்கு மிகத் தகுதியானவன் அல்லாஹ் ஒருவன் மட்டுமே, இதைப் பின்வரும் இறைவசனங்கள் உறுதி செய்கின்றன.

"நிச்சயமாக அல்லாஹ்தான் உண்மையில் இறைவன் மற்றும் அவனையன்றி (வேறு) எதை அவர்கள் பிரார்த்திக்கிறார்களோ அது பொய்யாகும்.

(அல்குர்ஆன் 22:62)

அல்லாஹ் (ஜல்) இந்த அடிப்படைக்காவே மனிதனையும் ஜின்னையும் படைத்தான். அதைக் கொண்டே ஏவினான். அதற்காகவேதான் தன் தூதர்களை அனுப்பினான். அதைக் கொண்டே தனது வேதங்களை அருளினான் என்ற விபரம் முன்னர் விவரிக்கப்பட்டுள்ளது. முஸ்லிம்களில் பெரும்பான்மையினர் இந்த அடிப்படை விஷயத்தை அறியாமல் அல்லாஹ்வைத் தவிர மற்றவர்களையும் வணங்குகிறார்கள். உதவி தேட உரித்தானவன் அல்லாஹ் ஒருவன் தான்.

அல்லாஹ்தான் இவ்வுலகையும் இவ்வுலகிலுள்ள அனைத்தையும் படைத்தவன் என்று நம்புவதும் அல்லாஹ்வை ஈமான் கொள்வதில் உள்ளதே. இன்னும் அவனே அவர்களது காரியங்களையெல்லாம் நிர்வகிப்பவன்; தான் நாடியபடி, அவனது சக்தியாலும் அறிவாலும் அவர்களுக்கு பொறுப்பாளனும் அவனே. இவ்வுலகின் மற்றும் மறு உலகின் அதிபதி, அவனைத் தவிர படைப்பாளன் யாரும் இல்லை; அவனே இவ்வுலகனைத்தையும் படைத்துப் பரிபாலிப்பவன் அவனைத் தவிர வேறு ஆண்டவன் இல்லை. இம்மையிலும் மறுமையிலும் மக்கள் நேர்வழி பெறவும் ஈடேற்றமடையவும் வழி எவற்றில் இருக்குமோ அத்தகு வேதங்களின் பக்கம் மக்களை அழைத்து அடியார்கள் நேர்வழி பெற அவற்றை இறக்கி அருளினான், நபிமார்களை அதற்காவே அனுப்பினான். மேற்கண்ட மற்ற விஷயத்திலும் அவனுக்கு இணை துணை ஏதும் இல்லை.

அல்லாஹ் கூறுகின்றான்:—

அல்லாஹ் தான் அனைத்துப் பொருட்களையும் படைப்பவன். எல்லாப் பொருட்களின் பாதுகாவலனும் அவனே. (அல்குர்ஆன் 39:62)

மேலும் அல்லாஹ் குறிப்பிடுகின்றான்.

நிச்சயமாக உங்கள் இறைவனாகிய அல்லாஹ் தான் ஆறு நாட்களில் வானங்களையும் பூமியையும் படைத்துப் பின் அர்ஷின் மீது அமைந்தான். அவனே இரவைக் கொண்டு பகலை மூடுகின்றான். அவ்விரவு பகலை வெகு விரைவில் பின் தொடர்கின்றது. இன்னும் சூரியனையும் சந்திரனையும் நட்சத்திரங்களையும் தன் கட்டளைக்கு ஆட்சிக்குக் கீழ்படிந்தவையாக(ப் படைத்தான்); படைப்பும் ஆட்சியும் அவனுக்கே சொந்தமல்லவா? அகிலங்களுக்கெல்லாம் இறைவனாகிய அல்லாஹ்வே மிகவும் பாக்கியமுடையவன்.

(அல்குர்ஆன் 7:54)

அல்லாஹ்வுக்கு அழகிய திருநாமங்கள் இருக்கின்றன என்பதை நம்புவதும் அல்லாஹ்வை ஈமான் கொள்வதில் உள்ளதாகும். உயர்வான அவனது வேதத்தில் வந்துள்ளதும் மற்றும் அவனது நம்பிக்கைக்குரிய தூதர் மூலமும் நிரூபனமான கண்ணியமிக்க அவனது திருநாமங்களையும், தன்மைகளையும் நம்புவதும் அவற்றை எவ்வித மாற்றம் இன்றியும் அவற்றில் எதையும் புறக்கணிக்காமலும், அவை எப்படி என மேல் விளக்கம் அளிக்காமலும் அதற்கு உதாரணங்கள் ஆக்காமலும் நம்பிக்கை கொள்ளவேண்டும். அவனது தன்மைகளை அவனது படைப்பினங்கள் எதனுடனும் ஒப்பிடாமல் அவனுக்கு தகுதியான முறையில் அவனது தன்மைகளின் கண்ணியமான பொருளை நமக்குக் கூறப்பட்டபடியே ஏற்றுக் கொள்வதும் ஈமானில் உள்ளதாகும்.

அல்லாஹ் குறிப்பிடுகிறான்:

"........... அவனைப் போன்று எப்பொருளும் இல்லை; அவன் தான் (யாவற்றையும்) செவியேற்பவன்; (யாவற்றையும்) பார்ப்பவன்"

(அல்குர்ஆன் 42:11)

மேலும் அல்லாஹ் சொல்கிறான்:

ஆகவே, நீங்கள் அல்லாஹ்வுக்கு உதாரணங்களைக் கூறாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ்தான் (யாவற்றையும் நன்கு அறிபவன்; ஆனால் நீங்கள் அறியமாட்டீர்கள்.

(அல்குர்ஆன் 16:74)

இதுதான் நபி(ஸல்) அவர்களின் தோழர்களினதும், அவர்களைப் பின்பற்றிய நல்லவர்களினதும் வழியாகிய 'அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்'தின் அகீதா (அடிப்படை) ஆகும். இதையே, "அல்—மகாலாத்து அன் அஸ் ஹாபில் ஹதீஸி வ அஹ்லிஸ் ஸுன்னத் தீ"

என்ற தமது நூலில் இமாம் அபுல் ஹஸன் அல் அஷ்அரீ (ரஹ்) அவர்கள் குறிப்பிடுள்ளனர். இக்கருத்தையே கல்வியறிவும் நம்பிக்கையும் உள்ள ஏனைய அறிஞர்களும் குறிப்பிட்டுள்ளனர்.

அல் அவ்ஸாயீ(ரஹ்) கூறுகிறார்கள். ஸுஹ்ரீ (ரஹ்) அவர்களிடமும், மக்ஹூல் (ரஹ்) அவர்களிடமும் அல்லாஹ்வின் தன்மைகள் சம்பந்தமான வசனங்கள் பற்றிக் கேட்கப்பட்டபோது, அது எப்படிக் கூறப்பட்டுள்ளதோ அப்படியே (கூறிவிடும்படி) ஏவினார்கள்.

அல் வலீது பின் முஸ்லிம்(ரஹ்) கூறுகிறார்கள். மாலிக், அல் அவ்ஸாயீ, லைஸ் பின் ஸஃது, சுப்யானுத் தௌரீ(ரஹ்) ஆகியோரிடம் அல்லாஹ்வின் தன்மைகள் பற்றி வந்துள்ள ஹதீஸ்களைப் பற்றிக் கேட்கப்பட்ட போது, அவர்கள் அனைவருமே அவை எப்படி என்பதுபற்றி ஏதும் கூறாமல் அவை எவ்வாறு வந்துள்ளதோ, அவ்வாறே கூறினார்கள்.

மேலும் அவ்ஸாயீ(ரஹ்) கூறுகிறார்கள். நாமும் தாபீயீன்களில் அனேகரும் அல்லாஹ் அர்ஷின் மீது அமைந்தான் என்றே கூறுவோம். மேலும் ஹதீஸ்களில் கூறப்பட்ட அல்லாஹ்வின் பண்புகளையும் நம்பிக்கை கொள்கிறோம்.

மாலிக்(ரஹ்) அவர்களின் ஷைக் ரபீஆ பின் அபூ அப்துர்ரஹ்மான்(ரஹ்) அவர்களிடம் "அல் இஸ்திவா" (அர்ஷின் மீது அல்லாஹ் அமைதல்) பற்றிக் கேட்கப்பட்டபோது, 'அல் இஸ்திவா (என்ற வார்த்தை) தெரிந்தது தான்! அது எவ்வாறு என்பதுதான் அறிவுக்கு எட்டாதது! அல்லாஹ்விடமிருந்து தூது வந்துள்ளது. அதை (அப்படியே) அறிவிப்பது ரஸூல்(ஸல்) அவர்களது கடமை. அதை உண்மை என நம்புவது நம்மீது கடமை எனக் குறிப்பிட்டார்கள்.

இது பற்றி மாலிக்(ரஹ்) அவர்களிடம் கேட்கப்பட்ட போது, 'அல் இஸ்திவா' என்பது அறியப்பட்டது தான்.அது எவ்வாறு என்பது அறியப்படாதது. அப்படி ஒரு பண்பு தன்மை அல்லாஹ்வுக்கு உள்ளது என நம்புவது நமது கடமை. அது பற்றி மேல் விளக்கம் கேட்பது பித்அத் என பதிலளித்னர். பின்னர் இந்தக் கேள்வி கேட்டவரைப் பார்த்து, 'நான் உன்னைக் கெட்ட மனிதனாகவே தவிரக் கருதவில்லை' என்று கூறி அவரை அங்கிருந்து சென்றுவிடும்படி ஏவினார்கள். முஃமின்களின் தாயாகிய உம்முஸலமா(ரழி) அவர்கள் மூலமும் இதே கருத்து அறிவிக்கப்பட்டுள்ளது.

இமாம் அபூஅப்துர்ரஹ்மான் அப்துல்லாஹ் பின் முபாரக்(ரஹ்) கூறுகிறார்கள். 'தனது படைப்பினங்களுக்கு முற்றிலும் மாறுபட்டவனாக வானங்களுக்கு மேலே அர்ஷின் மீது எங்கள் இறைவன் இருக்கிறான்' என நாங்கள் அவனை அறிந்து வைத்துள்ளோம்.

இச்சிறு சொற்பொழிவில் குறிப்பிட முடியாத அளவுக்கு. இந்த விஷயத்தில் அதிகமான கருத்துக்களை இமாம்கள் கூறியுள்ளனர். எனவே இந்த விஷயத்தில் மேலும் அறிய விரும்புவோர் நபி வழியில் நடந்த இஸ்லாமிய பேரறிஞர்கள் எழுதியவற்றைப் பார்வையிடவும், உதாரணமாக, அப்துல்லாஹ் பின் அல் இமாம் அஹ்மது அவர்களின், 'அத்தௌஹீது', அபுல் காஸிம் அல்—லாலிகாயி அத்தபரீ அவர்கள் எழுதிய அஸ்ஸுன்னா", அபூபக்கர் பின் அபூ ஆஸிம் அவர்கள் எழுதிய "அஸ்ஸுன்னா" ஆகிய நூல்களையும், "ஹமாத்" வாசிகளுக்கு ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா அவர்கள் அளித்த பதில் ஆகியவற்றையும் பார்வையிடுக.

ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா அவர்கள் கொடுத்த பதில் 'மிகச் சிறந்ததும் மிகப் பயனுள்ளதுமாகும். அந்த பதிலில் அஹ்லுஸ்

ஸின்னாக்களின் அகீதாவைத் தெளிவுபடுத்தியுள்ளனர். அதில் முன்னோர்களாகிய பேரறிஞர்களின் அதிகமான கூற்றுக்களை மேற்கோள் காட்டியுள்ளனர். மார்க்க அடிப்படையிலும் அறிவு ரீதியாகவும் அஹ்லுஸ்ஸுன்னாக்களின் கூற்றுத்தான் சரியானது என்பதை விளக்கியுள்ளார். இதற்கு எதிரிடையான வாதம் புரிவோரின் கருத்துக்கள் தவறானவை என்பதையும் தெளிவுபடுத்தியுள்ளார். இது போன்றது தான் அவர்களின் 'அல்மஃவஸுமதுபி த தம் முரிய்யா' என்ற நூலும் அதில் அவர்கள் அஹ்லுஸ் ஸுன்னாக்களின் கருத்தை மார்க்க அடிப்படையிலும் அறிவு ரீதியாகவும் தெளிவாக்கியுள்ளார். உண்மை வெளிப்படும் விதத்திலும் அசத்தியத்தின் சிரசு சிதறிடும் வகையிலும் மாற்றுக் கருத்துடையவர்களுக்கு அதிலே மறுப்புரைத்துள்ளார். அவர்கள் எந்தப் பண்புகளை ஏற்று எவற்றை மறுக்கிறார்களோ அவற்றில் அவர்களின் முரண்பாட்டை தெளிவாக்கியுள்ளார்.

அல்லாஹ் தனது வேதத்தில் தனக்கென்று எவற்றை உரிதாக்கிக் கொண்டானோ அவற்றையும், ரஸூல்(ஸல்) அவர்கள் தமது வழிமுறை சுன்னாவில் – அல்லாஹ்வுக்கு எவற்றை உரித்தான தனித் தன்மைகள் என்று விளக்கினார்களோ அவற்றையும் அப்படியே நம்பிச் செயல்படுபவர்களே அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமா அத்தினர். அவர்கள் அல்லாஹ்வின் ஸிபாத்துகளுள் எதையும் வீணாக்காமல், அவனது படைப்புக்களுள் எதனுடனும் அவனை ஒப்பிடாமல் அவனைத் தூய்மைப் படுத்தியுள்ளனர். எனவே அவர்கள் தங்களுக்குள் முரண்பட்டுக் கொள்ளாது எல்லா ஆதாரங்களையும் செயல்படுத்துவதால் வெற்றி பெற்றனர்.

எந்த உண்மையைக் கொண்டு, ரஸூல்மார்களை அல்லாஹ் அனுப்பி வைத்தானோ அதைக் கடைப் பிடித்து நடப்பவர்களுக்கு இது அல்லாஹ்வின் ஏற்பாடாகும். அதை அறிந்து கொள்வதில் தன் முழு

முயற்சியையும் செலவிட்டு அல்லாஹ்வுக்காக என்ற தூய எண்ணத்துடன் உண்மையைத் தெரிந்து கொள்ள முற்படுபவனுக்கு அல்லாஹ் தன் ஆதாரங்களை தெளிவாக்குகிறான்.

**அல்லாஹ் கூறுகின்றான்:**

**அவ்வாறில்லை! நாம் சத்தியத்தை அசத்தியத்தின் மீது வீசுகின்றோம். அதனால் (சத்தியம், அசத்தியத்தின் சிரசைச் சிதறடித்து விடுகிறது. பின்னர் (அசத்தியம்) அழிந்தே போய் விடுகிறது.**

**(அல்குர்ஆன் 21:18)**

**மேலும் அல்லாஹ் கூறுகின்றான்:**

**அவர்கள் உம்மிடம் எவ்விதமான உவமானத்தைக் கொண்டு வந்தாலும் (அதைவிடவும்) உண்மையானதும் அழகானதுமான ஒரு விளக்கத்தை நாம் உமக்குக் கொடுக்காமல் இல்லை.**

**(அல்குர்ஆன் 25;33)**

மேலும் நிச்சயமாக உங்கள் இறைவனாகிய அல்லாஹ்தான் ஆறு நாட்களில் வானங்களையும் பூமியையும் படைத்துப் பின்னர் அர்ஷின் மீது அமைந்தான் (7:54) என்ற இந்த இறைவசனத்தில் அல்ஹாபிழ் இப்னு கதீர்(ரஹ்) அவர்கள் "அல்இஸ்திவா" என்ற சொல்லுக்கு அளித்துள்ள விளக்கம் மிகப் பயனுள்ளது. அதை இங்குக் குறிப்பிடுவது பொருத்தம். அதாவது இந்த இடத்தில் மக்கள் பல கருத்துக்களை கொண்டுள்ளனர். அதை இங்கு விரிவாக எழுதுவது முடியாத . காரியம். இந்த இடத்தில் இமாம்களான மாலிக், அல் அவ்ஸாயி, அத்தௌரீ, அல் லைத் பின்ஸஃது, அஷ் .ஷாபிஈது, இஸ்ஹாக் பின் ராஹுவைஹி போன்ற ஸலபுஸ்ஸாலிஹீன்கள் என்ன குறிப்பிட்டார்களோ அதுவே நமது வழி முறையாகும்.

அது என்னவெனில், எவ்விதத்திலும் (அல் இஸ்திவா என்பதற்கு) மேல் விளக்கம் அளிக்காமலும், ஒப்புவமை காட்டாமலும் (அதே நேரத்தில்) அதைப் புறக்கணிக்காமலும் அது எப்படிக் கூறப்பட்டுள்ளதோ அப்படியே சொல்வதாகும். அல்லாஹ்வுக்கு ஒப்புவமை கூறக் கூடியவர்களுடைய கற்பனைகளில் உதிக்கும் தன்மைகளை விட்டுப் அவன் மிகப் பரிசுத்தமானவன். ஏனெனில் அல்லாஹ் தனது படைப்பினங்களில் எதற்கும் ஒப்பாக மாட்டான். அவனைப் போன்று எதுவும் இல்லை. அவன் தான் யாவற்றையும் செவியேற்பவன்; பார்ப்பவன்.

மேலும் இமாம் புகாரி(ரஹ்) அவர்களின் ஆசிரியரான நயீம் பின் ஹம்மாது அல் கஸாயிய்யீ (ரஹ்) அவர்கள் கூறுவது போல, 'அல்லாஹ்வின் படைப்பினங்களுடன் அல்லாஹ்வை ஒப்பிடுபவன் இறை நிராகரிப்பாளன் ஆவான். அல்லாஹ் தனக்குரிய தன்மைகளாக எவற்றை வர்ணித்துள்ளானோ அவற்றை மறுப்பவனும் காஃபிரே (இறை நிராகரிப்பாளனே) அல்லாஹ்வும் ரஸூலும், அல்லாஹ்வுக்கு என்ன தன்மைகள் இருப்பதாக வர்ணித்துள்ளனரோ, அவற்றில் ஒப்பும் உவமையும் இல்லை.

தெளிவான குர்ஆன் வசனங்களிலும் பலமான நபி மொழிகளிலும் உறுதி செய்யப்பட்டபடி அல்லாஹ்வுக்கு தகுதியான முறையில் குறைகளை விட்டும் அவனைப் பரிசுத்தப் படுத்தி, அவனது தன்மைகளைக் கூறக் கூடியவர்கள் தாம் நேர்வழியில் நடப்பவர்கள்.

### *2. வானவர்களை நம்புவது.*

மலக்குகளை ஈமான் கொள்ளவேண்டும் என்பது விரிவான பொருளிலும் குறிப்பாகவும் நம்புவது என இரு வகைப்படும். தனக்குக் கட்டுப்பட்டு நடப்பதற்காக அல்லாஹ் மலக்குகளைப் படைத்துள்ளான்; அவர்கள் சங்கையான அடியார்கள்; அவர்கள் (எந்த

ஒரு பேச்சையும்) அவனை முந்திப் பேச மாட்டார்கள். அவர்கள் அவன் கட்டளைப்படியே செயல் படுகிறார்கள்.

**அல்குர்ஆன் கூறுகிறது: அவர்களுக்கு முன்னால் இருப்பவற்றையும், அவர்களுக்கு பின்னால் இருப்பவற்றையும் அவன் நன்கு அறிவான். இன்னும் எவரை அவன் பொருந்தி ஏற்றுக் கொள்கிறானோ அ(த்தகைய)வருக்கன்றி அவர்கள் பரிந்து பேச மாட்டார்கள். இன்னும் அவர்கள் அவன்பால் உள்ள அச்சத்தால் நடுங்குபவர்களாகவும் இருக்கிறார்கள்.**

**(அல்குர்ஆன் 21:27, 28)**

அவர்கள் ஏராளமானோர் உள்ளனர். அவர்களுள் ஒரு வகையினர் அல்லாஹ்வின் அர்ஷைச் சுமப்பதற்கென்று ஏற்படுத்தப் பட்டுள்ளனர். சுவர்க்க நரகத்தைக் காவல் காக்கச் சிலர் மற்றும் சிலர், அடியார்களின் செயல்களைக் கண்காணிக்கின்றனர்.

அல்லாஹ்வும் அவனது ரஸூலும் பெயர் குறிப்பிட்டுக் கூறியுள்ள ஜிப்ரீல், மீக்காயீல், நரகைக் காக்க ஏற்படுத்தப்பட்டுள்ள மாலிக், சூர் ஊதுவதற்கென்று நியமிக்கப்பட்டுள்ள இஸ்ராயீல் ஆகியவர்களைக் குறிப்பாக நாம் நம்பவேண்டும் இவர்களைப் பற்றி ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

"வானவர்களாகிய மலக்குகள் ஒளியால் படைக்கப்பட்டவர்கள். ஜின்களை நெருப்புக் கொழுந்தினால் அல்லாஹ் படைத்துள்ளான். உங்களை எதனால் படைத்ததாக வர்ணித்துள்ளானோ அதைக் கொண்டு ஆதம்(அலை) அவர்களைப் படைத்தான்" என நபி(ஸல்) அவர்கள் கூறியதாக, அன்னை ஆயிஷா(ரழி) அவர்கள் மூலம் இமாம் முஸ்லிம்(ரஹ்) அவர்கள் தமது ஸஹீஹில் பதிவு செய்துள்ளனர்.

## 3. வேதங்களை நம்புதல்.

**இது போலவே வேதங்களைக் கொண்டும் பொதுப் படையாக ஈமான் கொள்ள வேண்டும் எப்படியெனில், மக்களைத் தன் வழியில் அழைக்கவும், உண்மையை விளக்கவும் தன் தூதர்களுக்கு அல்லாஹ் வேதங்களை இறக்கி அருளினான். இது பற்றி அல்லாஹ் குறிப்பிடுவதாவது: நிச்சயமாக நம் தூதர்களைத் தெளிவான அத்தாட்சிகளுடன் அனுப்பினோம். அன்றியும், மனிதர்கள் நீதியுடன் நிலைப்பதற்காக அவர்களுடன் வேதத்தையும் (நீதத்தின்) துலாக் கோலையும் இறக்கினோம்.**

**(அல்குர்ஆன் 57:25)**

**இன்னும் அல்லாஹ் குறிப்பிடுன்றான்:**

**மனிதர்கள் அனைவரும் ஒரே கூட்டத்தினராகவே இருந்தனர். (நல்லோருக்கு) நன்மாராயம் கூறுவோராகவும் (தீயோருக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்வோராகவும் அல்லாஹ் நபிமார்களை அனுப்பி வைத்தான்.**

(ஆரம்பத்தில்) மனிதர்கள் (அனைவரும்) ஒரே சமுதாயத்தவராகவே இருந்தனர். (அவர்கள் நேரான வழியில் செல்லும் பொருட்டு, நன்மை செய்வோருக்கு) நன்மாராயம் கூறும்படியும்,
(தீமை செய்வோருக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்யும்படியும் அல்லாஹ், நபிமார்களை அனுப்பிவைத்தான். தவிர, அம்மனிதர்களுக்குள் ஏற்படும் விதற்பங்களைத் தீர்த்து வைக்கும் பொருட்டு, அவர்களோடு சத்திய வேதத்தையும் அருட் செய்தான். இவ்வாறு தெளிவான அத்தாட்சிகள் (உள்ள வேதம்) வந்ததன் பின்னர், அதனைப் பெற்றுக் கொண்ட அவர்கள், தங்களுக்குள் ஏற்பட்ட பொறாமையின் காரணமாகவே, (அந்தச் சத்திய வேதத்திற்கு) மாறு செய் முற்பட்டனர். ஆயினும், அவர்கள் மாறுபட்டுப்

புறக்கணித்து விட்ட அந்தச் சத்தியத்தளவில் செல்லும்படி விசுவாசிகளுக்கு, அல்லாஹ் தன் அருளைக் கொண்டு (நேர்) வழி காட்டினான்.........

தௌராத், இன்ஜீல், ஸபூர், அல்குர்ஆன் போன்ற அல்லாஹ் பெயர் குறிப்பிட்டுக் கூறிய வேத நூல்களை விபரமாக விசுவாசிப்போம். அதிலும், அல்குர்ஆன் தான் அவை அனைத்தையும் விட மிகவும் சிறந்ததும், அவற்றில் இறுதியானதுமாகும். அவற்றின் ஆதிக்கத்தைக் கொண்டதாகவும், அவற்றை உண்மையாக்கக் கூடியதுமாக அல்குர்ஆன் விளங்குகின்றது. அல்குர்ஆனைப் பின்பற்றுவது, அல்குர்ஆனையும் அத்துடன் ரசூல்(ஸல்) அவர்களின் ஸஹீஹான ஹதீஸ்களையும் சட்ட அமுல் நடத்துவதும் சமுதாயத்தில் அனைவர் மீதும் கடமையாகும். ஏனெனில் அல்லாஹ் தஆலா முஹம்மத் நபி(ஸல்) அவர்களை இரு இனத்தவரா (ஜின், மனித இனங்களுக்கும் பொதுவாக அனுப்பி வைத்தான். அவர்களிடையே ஆட்சி செய்வதற்காகவே அல்குர்ஆனை அவர்கள் மீது அல்லாஹ் இறக்கி வைத்தான். மேலும், உள்ளங்களுள் உள்ளவைகளுக்கு சிகிச்சையாகவும், எல்லாவற்றுக்கும் தெளிவான விளக்கமாகவும், விசுவாசிகளுக்கு அருட்கொடையாகவும், நேர்வழியாகவும் அல்லாஹ் அல்குர்ஆனை இறக்கியுள்ளான். அல்லாஹ் அவ்வாறே அல்குர்ஆனில் கூறியுள்ளான் (இது வேதநூலை அதனை நாம் இறக்கி வைத்தோம். அது அருள்மிக்கது. எனவே, நீங்கள் அதனைப் பின்பற்றுங்கள் மேலும் நீங்கள் (அல்லாஹ்வைப்) பயந்து கொள்ளுங்கள் என்றும், மேலும் (எல்லாவற்றுக்கும் விளக்கமாகவும் முஸ்லிம்களுக்கு அருளாகவும், நற்செய்தியாகவும், நேர்வழியாகவும் குர்ஆனை உம்மீது இறக்கி வைத்தோம்).

நான் உங்கள் அனைவருக்கும் அல்லாஹ்வின் தூதராக வந்திருக்கிறேன். வானங்கள் பூமி ஆகியவற்றின் ஆட்சி அவனுக்கே

உரியது. அவனைத் தவிர (வணக்கத்திற்குரிய) நாயன் வேறு யாருமில்லை. அவனே உயிர்ப்பிக்கிறான். அவனே மரணம் அடையும் படியும் செய்கிறான். ஆகவே அல்லாஹ்வின் மீதும், எழுதப் படிக்கத் தெரியாத தூதராகிய அவன் நபியின் மீதும் ஈமான் கொள்ளுங்கள், அவரும் அல்லாஹ்வின் மீதும் அவன் வசனங்களின் மீதும் ஈமான் கொள்கின்றார். அவரையே பின் பற்றுங்கள். நீங்கள் நேர்வழி பெறுவீர்கள். (7:158) இதே பொருளில் இன்னும் பல வசனங்களும் வந்துள்ளன.

### *4. அல்லாஹ்வின் தூதர்களை நம்புதல்.*

இது போலவே பொதுவாகவும் குறிப்பாகவும் இறைத் தூதர்களை நம்புவதும் கடமையாகும். அல்லாஹ் (ஜல்) தனது அடியார்களிடம், ரஸூல்மார்களை, நற்செய்தி கூறக்கூடியவர்களாகவும், அச்சமூட்டி எச்சரிப்பவர்களாகவும் உண்மையின் பக்கம் அழைக்கக் கூடியவர்களாகவும் அனுப்பியுள்ளான். யார் அவர்களின் அழைப்பை ஏற்றுக் கொண்டார்களோ அவர்கள் நற்பாக்கியத்தால் வெற்றி பெற்றனர். யார் அவர்களுக்கு மாறு செய்தார்களோ அவர்கள் கைசேதமடைந்தவர்களாகவும் நஷ்டப்பட்டவர்களாகவும் ஆனார்கள். அந்த ரஸூல் மார்களுள் இறுதியானவர்களும் சிறந்தவர்களும் நமது நபிமுஹம்மது (ஸல்) இப்னு அப்துல்லாஹ் அவர்களாவார்கள். அல்லாஹ் இது பற்றி

"மெய்யாக நாம் ஒவ்வொரு சமூகத்தாரிடத்திலும், "அல்லாஹ்வையே நீங்கள் வணங்குங்கள்; ஷைத்தான்களை விட்டும் நீங்கள் விலகிச் செல்லுங்கள்" என்று (உபதேசிக்குமாறு) நம் தூதர்களை அனுப்பி வைத்தோம் (16:36) என்று குறிப்பிடுகின்றான். மேலும்

தூதர்கள் வந்தபின் அல்லாஹ்வுக்கு எதிராக மக்களுக்கு (சாதகமாக) ஆதாரம் எதுவும் ஏற்படாமல் இருக்கும் பொருட்டு, தூதர்கள்

(பலரையும்) நன் மாராயம் கூறுபவர்களாகவும், அச்ச மூட்டி எச்சரிக்கை செய்பவர்களாவும் (அல்லாஹ் அனுப்பினான்) என்றும் (அல்குர்ஆன் 4:165)

முஹம்மது(ஸல்) அவர்கள் உங்கள் ஆடவர்களுள் எவர் ஒருவருக்கும் தந்தையாக இருக்கவில்லை. ஆனால் அவரோ, அல்லாஹ்வின் தூதராகவும் நபிமார்களுக்கெல்லாம் இறுதியாகவும் இருக்கின்றார் (33:40) என்றும் கூறியுள்ளான்.

நபிமார்களுள் அல்லாஹ் குறிப்பிட்டுக் கூறிய மற்றும் நபி(ஸல்) அவர்களால் பெயர் குறிப்பிடப்பட்ட நூஹ் ஹூது, ஸாலிஹ், இப்ராஹீம் போன்ற இறைத் தூதர்களையும் இன்னும் பலரையும் நாம் ஈமான் கொள்வது அவசியம். அவர்கள் மீதும் சமாதானத்தையும் அருள்வானாக!

### *5. இறுதி நாள் பற்றி நம்புதல்.*

இறுதி நாளைப் பற்றி ஈமான் கொள்வதில் அல்லாஹ்வும் அவனது தூதரும் அதுபற்றி என்னவெல்லாம் அறிவித்திருக்கிறார்களோ அவை அனைத்தும் அடங்கும். அவையாவன: மரணத்திற்குப் பின்னர் நிகழும் கப்ருடைய வேதனை, குழப்பம், கப்ருடைய அருட் கொடைகள் ஆகியவைவாகும். மேலும் மறுமை நாளில் ஏற்படும் திடுக்கங்கள், துன்பங்கள், கஷ்டங்கள், ஸிராத் எனும் பாலம், மீஸான் எனும் தராசு, கேள்வி கணக்கு, தண்டனை மற்றும் மக்களின் முன்னலையில் அவர்களின் (நன்மை தீமை பற்றிய) ஏடுகள் விரிக்கப்படுதல், அந்த ஏடுகளை வலது கரத்தில் அல்லது இடது கரத்தில் அல்லது பின்புறமாகப் பெறுவோர் ஆகிய அனைத்தும் மறுமைநாளை நம்புவதின்பாற்பட்டதே.

இன்றும் நம் நபி முஹம்மது(ஸல்) அவர்களின் தடாகம், சுவர்க்க நரகம் மற்றும் முஃமினான அடியார்கள் இறைவனைக்

காண்பது, அவனுடன் உரையாடுவது, மற்றும் இவை தவிர குர்ஆனிலும் ஆதாரப்பூர்வமான நபி மொழிகளிலும் வந்துள்ளவையும் அடங்கும், இவை அனைத்தையும் அல்லாஹ்வும் ரஸூலும், விவரித்த படியே நாம் நம்ப வேண்டும்.

### *6. விதியை நம்புதல்.*

விதியை நம்புவதும் ஈமானில் உள்ளதுதான். விதியை நம்பு வதில் நான்கு விஷயங்கள் உள்ளடங்கியு ள்ளன. 1. இதுவரை நடந்தவை அனைத்தையும், இனி நடக்கப் போகின்ற அனைத்தையும் அல்லாஹ் அறிவான். தன் அடியார்களின் நிலவரம், அவர்களது உணவு அவர்களது தவணைக் காலம், அவர்களது செயல்பாடுகள் இன்ன பிற தன்மைகள் அனைத்தையும் அல்லாஹ் அறிவான். இவற்றுள் எதுவும் அவனுக்கு மறைவானதன்று. இதுபற்றி அல்லாஹ் கூறுவதாவது:

நிச்சயமாக அல்லாஹ் ஒவ்வொன்றையும் அறிகின்றான்.

(அல்குர்ஆன் 29:62)

இன்னும் அல்லாஹ் கூறுகின்றான்:

நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பொருட்கள் மீதும் சக்தியுடையவன் என்பதையும், மேலும் நிச்சயமாக அல்லாஹ் தன் ஞானத்தால் எல்லாப் பொருளையும் சூழ்ந்தறிகிறான் என்பதையும் நீங்கள் அறிந்து கொள்வதற்காக அவற்றின் (வானங்கள், பூமியின்) இடையே அவனது கட்டளை இறங்கிக் கொண்டே இருக்கிறது.

(அல்குர்ஆன் 65:12)

2. அல்லாஹ் எதைத் தீர்மானித்து விட்டானோ அதையும், எதை விதியாக நிர்ணயித்து விட்டானோ அதையும் எழுதிவிட்டான் என நம்பவேண்டும். இது பற்றி அல்லாஹ் குறிப்பிடுவதாவது:

(மரணத்திற்கு பின்) அவர்களிலிருந்து (அவர்கள் உடலை) பூமி எந்த அளவு குறைத்திருக்கின்றதோ அதைத் திட்டமாக நாம் அறிந்திருக்கின்றோம். நம்மிடம் (யாவும்) பதிவு செய்யப்பட்டுப் பாதுகாக்கப்பட்ட ஏடு இருக்கிறது.

(அல்குர்ஆன் 50:4)

எல்லாவற்றையும் நாம் ஒரு விளக்கமான ஏட்டில் பதிவு செய்தே வைத்துள்ளோம்.

(அல்குர்ஆன் 36:12)

நிச்சயமாக வானத்திலும் பூமியிலும் உள்ளவற்றை அல்லாஹ் நன்கு அறிகிறான் என்பதை நீர் அறியவில்லையா? நிச்சயமாக இவையெல்லாம் ஒரு புத்தகத்தில் (பதிவு செய்யப்பட்டு) இருக்கின்றன. நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிகவும் சுலபமானது.

(அல்குர்ஆன் 22:70)

அல்லாஹ் எதை நாடினானோ அது நடக்கும்; எதை நாடவில்லையோ அது நடக்காது. இது பற்றி அல்லாஹ் கூறுவதாவது; நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியதைச் செய்கின்றான்.

(அல்குர்ஆன் 22:18)

எப்பொருளையேனும் அவன் படைக்க நாடினால், அதற்கு அவன் கட்டளையிடுவதெல்லாம் "குன்" (ஆகுக) என்று கூறுவது தான். உடனே அது ஆகிவிடும்.

(அல்குர்ஆன் 36:82)

ஆயினும், அகிலங்களுக்கெல்லாம் இறைவனாகிய அல்லாஹ் நாடினாலன்றி நீங்கள் (நல்லுபதேசம் பெற) நாடமாட்டீர்கள். (81:29)

இவ்வுலகில் உண்டாகி இருக்கின்ற அனைத்தையும் அவனே படைத்தான். வேறுபடைப்பாளனோ அன்றி பரிபாலிப்பவனோ இல்லை. அல்லாஹ் இது பற்றிக் குறிப்பிடுதாவது.

**அல்லாஹ்தான் அனைத்துப் பொருட்களையும் படைப்பவன்; இன்னும் அவனே எல்லாப் பொருட்களின் பாதுகாவலனும் ஆவன்.**

**(அல்குர்ஆன் 39:62)**

**மனிதர்களே! உங்கள் மீது அல்லாஹ் வழங்கியுள்ள பாக்கியங்களைச் சிந்தித்துப் பாருங்கள். வானத்திலும் பூமியிலும் இருந்து உங்களுக்கு உணவளிப்பவன் அல்லாஹ்வையன்றி (வேறு) படைப்பாளன் இருக்கின்றானா? அவனையன்றி வேறு நாயன் இல்லை, அவ்வாறிருக்க, இவ்வுண்மையை விட்டும் நீங்கள் எவ்வாறு திருப்பப்படுகிறீர்கள்?**

**(அல்குர்ஆன் 35:3)**

விதியை நம்புவதில் மேற்கண்ட நான்கு விஷயங்களும் அடங்கியவை என்பது குர்ஆன் ஹதீஸைப் பின்பற்றும் சுன்னத்து வல் ஜமா அத்தின் கொள்கையாகும். இவற்றுள் சிலவற்றை பித்அத் வாதிகளாகிய மாற்றுக் கொள்கைக்காரர்கள் மறுக்கின்றனர்.

ஈமான் என்பது சொல்லும் செயலும் ஆகும். அது அல்லாஹ்வுக்குக் கட்டுப்படுவதன் மூலம் அதிகரிக்கும்; மாறு செய்வதன் மூலம் குறையும் என்பதும், அல்லாஹ்வை ஈமான் கொள்வதில் அடங்கியதே. முஸ்லிம்களுள் யாரையும் – அவர் இறைவனுக்கு இணை வைத்து இறை நிராகரிப்புச் செய்யாத வரையில் அவரைக் காஃபிர் என்று கூறக் கூடாது. விபச்சாரம், திருடு, வட்டிப் பொருளை உண்பது, போதைப் பொருளைப் பயன்படுத்துவது, தாய் தந்தையரை நோவினை செய்வது இன்னும்

இதுவல்லாத இன்ன பிற பெரும் பாவங்களை – அவற்றில் ஈடுபட்டவர்கள் ஹலால் (ஆகுமானது) எனக் கருதாத வரை அவர்களைக் காஃபிர் எனக் கூறக் கூடாது. ஆனால் அவர்கள் இவற்றை 'ஹலால்' எனக் கருதினால், அவர்கள் காஃபிராகி விடுவர். ஏனெனில், அல்லாஹ் குறிப்பிடுகின்றான்.

நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணை வைப்பதை மன்னிக்கவே மாட்டான். இதைத்த தவிர (மற்ற) எதையும் தான் நாடியவர்களுக்கு மன்னிப்பான்.

(அல்குர்ஆன் 4:48,116)

'கடுகளவு ஈமான் யாருடைய உள்ளத்தில் உள்ளதோ, அவர்களை நரகை விட்டும் அல்லாஹ் வெளியேற்றி விடுகிறான்' என்பது நபி(ஸல்) அவர்களின் (முதவாதிர்ஆன) ஹதீஸில் வந்துள்ளது.

அல்லாஹ்வுக்காகவே நேசம் வைப்பதும், அல்லாஹ்வுக்காகவே வெறுப்பதும், அல்லாஹ்வுக்காகவே உறவு வைத்துக் கொள்வதும், அல்லாஹ்வுக்காகவே பகைத்துக் கொள்வதும் ஆகியவை. அல்லாஹ்வை ஈமான் கொள்வதில் அடங்கியவையே. முஃமின்கள் மற்ற முஃமின்களையே நேசம் வைக்க வேண்டும்; காஃபிர்களை நேசம் வைத்தலாகாது.

இந்தச் சமுதாயத்தில் முஃமின்களுள் தலைமையானவர்கள் நபித்தோழர்கள் ஆவர் சரியான சுன்னத்து வல் ஜமாஅத்தினர் அவர்களைப் பிரியம் வைக்கிறார்கள், நபி மார்களுக்குப் பின்னர் அவர்கள் தாம் மனிதர்களிலேயே சிறப்பானவர்கள் எனவும் நம்பி இருக்கிறார்கள். ஏனெனில், நபி(ஸல்) அவர்கள் பின்வருமாறு குறிப்பிட்டார்கள். "சமுதாயத்தில் மிகச் சிறந்தவர்கள் எனது காலத்தில்

வாழும் என் தோழர்கள். பின்னர் மிகச் சிறந்தவர்கள் அதற்குப் பின்பு தோன்றுவோர் பின்னர் அதன்பின் தோன்றுபவர்கள் மிகச் சிறந்தவர்கள். இந்த நபிமொழி மிகச் சரியானது என்பதில் ஏகோபித்த கருத்துண்டு.

அந்த நபித் தோழர்களிலேயே மிகச் சிறந்தவர்கள் அபூபக்கர் ஸித்தீக்(ரழி) பின்னர் உமர் பாரூக்(ரழி) பின்னர் உதுமான் தின்னூரைன்(ரழி) . பின்னர் அலி அல்முர்தளா(ரழி) அல்லாஹ் இவர்கள் அனைவரையும் பொருந்திக் கொள்வானாக. இவர்களுக்குப் பின்னர் சுவனத்தைக் கொண்டு நற்செய்தி கூறப்பட்ட பத்துப் பேர்களுடன் ஏனய நபித்தோழர்களும் சிறந்தவர்கள் என்பதில் உறுதியாக இருப்பார்கள்.

மேலும் நபித்தோழர்களுக்கு மத்தியில் நடந்த சில கருத்து வேறுபாடுகளை உண்மையான அஹ்லுஸ்ஸுன்னத் வல் ஜமாஅத்தினர் விமர்சிக்காததுடன் பேரறிஞர்கள் அந்தப் பிரச்சனைகளில் ஆராய்ச்சி செய்து அவற்றில் யார் சரியானதைப் பெற்று கொண்டாரே அவருக்கு இரட்டைக் கூலியும் ஆராய்ச்சியில் சரியானதைப் பெற்று கொள்ளவில்லையோ அவருக்கு (முயற்சி செய்தற்காக) ஒரு கூலி எனவும் நம்பிக்கை வைப்பார்கள்.

நபி அவர்களின் குடும்பத்தினரையும் நபி(ஸல்) அவர்களின் மனைவியரும் நம் முஃமின்களின் தாய்மார்களும் ஆன அனைவரையும் நேசம் வைப்பார்கள் அவர்கள் அனைவர்களையும் பொருந்திக் கொள்வார்கள். நபி(ஸல்) அவர்களின் தோழர்களைத் திட்டுகின்ற, பழிக்கின்ற மேலும் நபி(ஸல்) அவர்களின் குடும்பத்தினரை அல்லாஹ் வரையறுத்த அந்த ஸ்தை விட அதிகமாக உயர்த்துகின்ற „ராபிழாக்களின்„ வழி முறையை விட்டு நீங்கி இருப்பதுடன் நபி(ஸல்) அவர்களின் குடும்பத்தினரை சொல்லாலும்

செயலாலும் துன்புறுத்தக் கூடிய (நவாஸிப்) என்ற கூட்டத்தினரின் வழிமுறையை விட்டும் நீங்கி இருப்பர்.

நாம் மேற்குறிப்பிட்ட அனைத்தும் சரியான இஸ்லாமிய கொள்கையின் பாற்பட்டதாகும். அந்க் கொள்கைக்காகத் தான் முஹம்மது (ஸல்) அவர்களை அல்லாஹ் அனுப்பினான். இது தான் ஈடேற்றம் பெற்ற கூட்டமான 'அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத்தின் கொள்கையாகும். இது பற்றி நபி(ஸல்) அவர்கள் உதவி செய்யப்பட்ட நிலையில் என் உம்மத்திலிருந்து ஒரு கூட்டம் எப்போதும் சத்தியத்தில் நிலைத்து இருக்கும். அல்லாஹ்வின் கட்டளை வரும்வரை வழிகெடுக்கும் யாரும் அவர்களுக்குத் தீங்கிழைக்க முடியாது எனக் கூறியுள்ளார்.

"யூதர்கள் 71 கூட்டமாகப் பிரிந்தனர் கிறித்தவர்கள் 72 கூட்டமாகப் பிரிந்தனர். எனது இந்த சமுதாயத்தினர் 73 கூட்டமாகப் பிரிவர். இவற்றுள் ஒரேயொரு கூட்டத்தினர் தவிர மற்றையோர் அனைவரும் நரகிற்கு உரியவர்கள்" என நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டபோது, "அல்லாஹ்வின் தூதரே! அவர்கள் யார்?" என நபித்தோழர்கள் கேட்டனர். அப்போது, "நானும் எனது தோழர்களும் எந்த வழியில் இருக்கின்றோமோ, அப்படி இருப்பவர்கள்" என பதிலளித்தனர். அது தான் சரியானதும் ஏற்று நடக்கத் தக்கதுமான இஸ்லாமிய அடிப்படைக் கொள்கையாகும் இதற்கு மாறான அனைத்தும் விட்டு விடத் தக்கதாகும்.

இந்த அடிப்படையை விட்டும் வழிதவறியவர்களும், இதற்கு மாற்றமான கொள்கையில் செல்லக் கூடியவர்களும் ஏராளமானோர் உள்ளனர். சிலை வணங்கிகள், விக்ரஹ வணக்கம் புரிவோர், வானவர்களையும் அவ்லியாக்களையும் ஜின்களையும் மரங்களையும் கற்களையும் மற்றும் அனைத்தையும் வணங்குவோர் இவர்கள்

அனைவருமே நபியின் ஏகத்துவ அழைப்பை ஏற்காதவர்கள். அது மட்டுமின்றி குரைஷிகளும், அரபுகளில் சில கூட்டத்தினரும் நபி(ஸல்) அவர்களுடன் நடந்து கொண்டது போல அவர்களுக்கு மாறுபாடாக நடந்து, அவர்களது கொள்கையை ஏற்க மறுத்தவர்கள்.

இவர்கள் தாங்கள் வணங்கும் தெய்வங்களிடம் தங்களது தேவைகளைக் கேட்கின்றனர். மேலும் நோயாளியை குணப்படுத்தவும் எதிரிகளுக்குப் பாதகமாக நமக்கு உதவி செய்யும் அவற்றிடம் கோருகின்றனர். அந்த உதவி தேட உரித்தானவன் அல்லாஹ் ஒருவனே.

நபி(ஸல்) அவர்களின் அறியாமை மிகைத்த காரணத்தாலும் இன்றைய நமது காலம் வரை இந்த இணை வைத்தல் பரவ ஆரம்பித்து மக்களிடையே நீங்கா, இடம் பெற்றுவிட்டது. இவை எங்களுக்கு அல்லாஹ்விடம் மன்றாட்டம் செய்பவை (10:18)

"அவர்கள் எங்களை அல்லாஹ்வின் அருகே சமீபமாக்கி வைப்பார்கள் என்பதற்காவேயன்றி நாங்கள் அவர்களை வணங்கவில்லை (39:3) இவையே முன்னோர்களின் வாதம். இதுவே பின்னோர்களின் வாதமாகவும் ஆகிவிட்டது.

அல்லாஹ்(ஜல்) இந்த வாதங்களை முறியடித்து, அவனையன்றி எதை வணங்கினாலும் அவனுக்கு இணை வைத்து அவனை நிராகரித்தவனாவன் என விளக்குகின்றான்.

தங்களுக்கு (யாதொரு) நன்மையோ தீமையோ செய்ய இயலாத, அல்லாஹ் அல்லாதவற்றை (இணை வைப்போர்) வணங்குகிறார்கள். இன்னும் அவர்கள், "இவை எங்களுக்கு அல்லாஹ்விடம் மன்றாட்டம் செய்பவை" என்றும் கூறுகிறார்கள்

(10:18) இவ்வாறு அவர்கள் கூறியதற்கு அல்லாஹ் பின்வருமாறு மறுப்பளிக்கிறான்.

(நபியே!) அதற்கு நீர், வானங்களிலோ பூமியிலோ அல்லாஹ் அறியாதவை (இருக்கின்றன என எண்ணிக் கொண்டு) நீங்கள் அவனுக்கு அறிவிக்கின்றீர்களா? அவன் மிகவும் பரிசுத்தமானவன். அவர்கள் இணைவைப்பவற்றை விட அவன் மிகவும் உயர்ந்தவன்" என்று கூறுவீராக.

(அல்குர்ஆன் 10:18)

அல்லாஹ்வை வணங்காமல், நபிமார்கள், அவ்லியாக்கள் போன்றவர்களை வணங்குவது மிகப் பெரிய ஷிர்க் – மாபெரிய இணைவைத்தல் – என்பதை இந்த வசனத்தில் இறைவன் தெளிவு படுத்தியுள்ளான். இதைச் செய்யக் கூடியவர்கள் இதற்கு வேறு பெயரிட்டாலும் சரியே. அது இணைவைத்தல் – ஷிர்க் – தான் இன்னும் அல்லாஹ் கூறுகின்றான்.

"இன்னும் அவனையன்றி (மற்றவர்களை)ப் பாதுகாப்பாளர்களாக எடுத்துக் கொண்டிருப்பவர்கள், "அவர்கள் எங்களை அல்லாஹ்வின் அருகே சமீபமாக்கி வைப்பார்கள் என்பதற்காவேயன்றி நாங்கள் அவர்களை வணங்கவில்லை" என்று கூறுகின்றனர்.

(அல்குர்ஆன் 39:3)

இப்படிக் கூறுவோருக்கு அல்லாஹ் பின்வருமாறு பதிலடி கொடுக்கின்றான்.

அவர்கள் எதில் வேறுபாடு கொண்டிருக்கிறார்களோ, அதைப் பற்றி நிச்சயமாக அல்லாஹ் அவர்களுக்கிடையே தீர்ப்பளிப்பான். பொய்யனாக நிராகரித்துக் கொண்டிருப்பவனை நிச்சயமாக அல்லாஹ் நேர்வழியில் செலுத்த மாட்டான்.

(அல்குர்ஆன் 39:3)

அல்லாஹ் அல்லாத்வர்களிடம் துஆக் கேட்டால், அல்லாஹ் அல்லாதவர்களுக்குப் பயப்படுதல், அவர்களிடம் ஆதரவு வைத்தல், மற்றும் இது போன்ற ஏனைய காரியங்கள் அனைத்தும் அவனை நிராகரிப்பதாகும் என்பதை அல்லாஹ் தெளிவுபடுத்தி விட்டான். அவர்கள் வணங்கும் கடவுளர்கள் அவர்களை அல்லாஹ்விடம் நெருக்கி வைப்பார்கள் என்ற அவர்கள் கூற்றில் பொய்யே சொல்கிறார்கள் எனவும் கூறியுள்ளான்.

மிகச் சரியான இஸ்லாமிய அடிப்படைக் கொள்கைக்கு மாற்றமானதும், ரஸூல்(ஸல்) அவர்கள் கொண்டு வந்த கொள்கைக்கு முரணானதுமான கொள்கை என்னவெனில் சமீப காலத்தில் தோன்றிய நாத்திகவாதம் பேசும் வரம்பு மீறியவர்களான வழிகேட்டின் பக்கம் மக்களை அழைத்த காரல்மார்க்ஸ், லெனின் போன்றவர்களைப் பின்பற்றிய நாத்திகக் கொள்கையாகும். அவர்கள் இக்கொள்கைக்கு சோசலிசம் என்றோ கம்யூனிஸம் என்றோ பாதிஸம் என்றோ மற்றும் இதுவல்லாத எப் பெயரிட்டுக் கொண்டாலும் சரியே, இந்த நாத்திகர்களின் அடிப்படை என்னவெனில் அல்லாஹ் இல்லை என்பதும், இவ்வுலக வாழ்வே சதம் என்பதுமாகும்.

இவர்களது மற்றொரு அடிப்படை மறுமை வாழ்வு, சுவர்க்கம், நரகம் ஆகியவற்றை மறுப்பதும் எல்லா மார்க்கங்களையும் மதங்களையும் நிராகரிப்பதும் தான். இவர்களது புத்தகங்களைப் படிப்பவர் இவற்றைத் தெளிவாக உணர்வர்.

அல்லாஹ்வினால் அருளப்பட்ட எல்லா மதங்களுக்கும் முரண்பட்டதே இவர்களது கொள்கை என்பதில் எவ்விதச் சந்தேகமும் இல்லை. இதைப் பின்பற்றுவோர் இவ்வுலகிலும் மறு உலகிலும் தீய,

கைசேதமான முடிவுகளுக்கு ஆளாவர் என்பதிலும் எந்தச் சந்தேகமும் இல்லை.

அல்குர்ஆன், அல்ஹதீஸ்களுக்கு உரிய பொருளை மறைத்து, மறைபொருள் உண்டென்று கூறும் ,,பாத்தினிய்யாக்கள்,, மற்றும் சூபிய்யாக்களினதும் கொள்கையும் உண்மையான இஸ்லாமியக் கொள்கைகளுக்கு மாறுபட்டதுதான். இவர்கள் அவ்லியாக்களின் பெயர்களைக் குறிப்பிட்டு அவர்கள், (அல்லாஹ்வுடன் இணைந்து) இவ்வுலகை நிர்வகிக்கின்றனர் எனக் கூறி அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்கின்றனர். அந்த அவ்லியாக்களுக்கு "குத்புகள்" (அச்சாணி போன்றவர்) "அவ்தாது" (முளைக்குச்சி போன்றவர்) "கவுஸுகள்" (பாதுகாத்து இரட்சிப்பவர்) என்றெல்லாம் பெயர் சூட்டுகின்றனர். இது "ருபூபிய்யத்" என்ற படைத்துப் பரிபாலிக்கும் இறைத் தன்மையில் வைக்கப்படும் மிகப் படுமோசமான ஷிர்க் – இணைவைத்தல் – ஆகும். அறியாமைக் கால அரபிகளின் இணை வைத்தலை விட இது மோசமானதாகும். ஏனெனில், அரபிக் காபிர்கள் "ருபூபிய்யத்"தில் இணை வைக்கவில்லை, மாறாக அவர்கள் வணக்க வழிபாடுகளில் மட்டுமே இணைவைத்தனர். அவர்களது நல்வாழ்வின் போதே (இறைவனை மறந்து) இணைவைத்தனர். ஆனால் கஷ்டமான சோதனைக் கட்டத்தில் தங்களது வணக்கத்தைத் இறைவனுக்கு மட்டுமே செலுத்தினார்கள். இறைவனை மட்டுமே (மறக்காமல்) வணங்கினார்கள். இது பற்றி அல்லாஹ் கூறுகின்றான்:

மேலும் அவர்கள் மரக்கலங்களில் ஏறிக் கொண்டால் அந்தரங்க சுத்தியுடன் சன் மார்க்கத்தில் வழிப்பட்டவர்களாக அல்லாஹ்வைப் பிரார்த்திக்கின்றனர். ஆனால், அவன் அவர்களைப் (பத்திரமாக) கரைக்குக் கொண்டு வந்து சேர்த்து விட்டால், அவர்கள் (அவனுக்கே) இணை வைக்கின்றனர்.

(அல்குர்ஆன் 29:65)

"ருபூபிய்யத்" என்ற படைத்துப் பரிபாலிக்கும் தன்மையை அவர்கள் அல்லாஹ்வுக்கு மட்டுமே உரித்தாக்கி அதைத் தங்கள் வாய்களாலேயே ஒப்புக் கொண்டுள்ளனர். இது பற்றி அல்லாஹ் கூறுகின்றான்.

**"மேலும் அவர்களிடம், அவர்களைப் படைத்தவன் யார்? என்று நீர் கேட்டால், "அல்லாஹ்" என்றே அவர்கள் நிச்சயமாகக் கூறுவார்கள்"**

**(அல்குர்ஆன் 43:87)**

**அல்லாஹ் இன்னும் கூறுகின்றான்:**

**உங்களுக்கு வானத்திலிருந்தும் பூமியிலிருந்தும் உணவளிப்பவன் யார்? (உங்கள்) செவிப்புலன் மீதும் (உங்கள்) பார்வைகளின் மீதும் சக்தியுடையவன் யார்? (அகிலங்களின் அனைத்துக்) காரியங்களையும் திட்டமிட்டுச் செயல்படுத்துபவன் யார்? என்று நபியே! நீர்கேளும். அவ்வாறாயின் அவனிடம் நீங்கள் பயபக்தியுடன் இருக்க வேண்டாமா? எனக் கேட்பீராக!**

**(அல்குர்ஆன் 10:31)**

இந்தக் கருத்தில் திருகுர்ஆன் வசனங்கள் பல உள்ளன. இணை வைப்பவர்களுள் (தற்போதுள்ள) பிற்காலத்தவர்கள் முற்காலத்து இணை வைப்பாளர்களை விடவும் இரண்டு விஷயத்தை அதிகப்படுத்தி விட்டனர். அவற்றுள் ஒன்று: அவர்களுள் சிலர் படைத்து பரிபாலிக்கும் தன்மையாகிய "ருபூபிய்யத்" விஷயத்தில் இணை வைத்தனர். இரண்டாவது, இன்பத்திலும் துன்பத்திலும் இணை வைத்தல், இதை நாம் அன்றாட வாழ்வில் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

எகிப்து நாட்டில் ஹுஸைன், பதவி மற்றும் பலருடைய கப்ருகளில் மக்கள் என்ன செய்கின்றனர் என்பதையும் பாருங்கள்.

ஏடனில் "ஐதரூஸ்" அவர்களின் கப்ரிலும் எமனில் "ஹாதி" அவர்களின் கப்ரிலும் சிரியாவில் "இப்னு அரபியின்" மண்ணறையிலும் இராக்கில் ஷைக் அப்துல் காதிர் ஜீலானி அவர்களின் கப்ரிலும் இது தவிர மற்ற பிற பிரபலமானவர்களின் கப்ருகளிலும் என்ன நடக்கிறது?! பொதுமக்கள் இங்கே வரம்பு கடந்து நடந்து கொள்கின்றனர். அல்லாஹ்வுக்குச் செலுத்தவேண்டிய கடமைகளில் பெரும்பாலானவற்றை இவற்றுக்குச் செலுத்துகின்றனர்.

தனது தூதர் முஹம்மது(ஸல்) அவர்களையும், அவர்களுக்கு முன்னர் வந்த நபிமார்களையும் எந்த ஏகத்துவத்தின் உண்மை நிலையை விளக்குவதற்காக அனுப்பினானோ, அதை விளக்கிச் சொல்வோரும், மேற்கண்ட அனாச்சாரங்களை மறுத்து அவர்களைத் தடை செய்பவர்களும் மிகக் குறைந்த எண்ணிக்கையினரே. இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிவூன்.......(நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள். இன்னும் நாம் அவனிடமே திரும்பக் கூடியவர்களும் ஆவோம்)

நேர் வழியில் அழைக்கும் அழைப்பாளர்கள் அவர்களுக்கு மத்தியில் அதிகரிக்கவும், இந்த ஷிர்க்கை எதிர்த்துப் போராடுகின்ற அறிஞர்களும் முஸ்லிம் வழி காட்டிகளும் தோன்ற அவர்களை நேர்வழிப் படுத்தவும் அதற்கான முயற்சியில் ஈடுபடவும் அல்லாஹ்விடம் துஆச் செய்வோமாக. நிச்சயமாக அவனே சமீபத்திலிருந்து அனைத்தையும் கேட்பவனாக இருக்கின்றான்.

அஸ்மா(அல்லாஹ்வின் பெயர்கள்) ஸிபாத் (அல்லாஹ்வின் பண்புகள்) விஷயத்தில் முஃதஸிலா ஜஹ்மிய்யா என்ற பிரிவாரின் கொள்கையும் இந்த வழியில் நடக்கின்ற மற்ற பித்அத்வாதிகளின் கொள்கையும், இஸ்லாமிய அடிப்படைக் கொள்கைக்கு மாற்றமான கொள்கையே. அதாவது அவர்கள் அல்லாஹ்வுக்கு இருக்கின்ற

அனைத்துப் பண்புகளையும் தன்மைகளையும் மறுக்கின்றனர். அவனுக்குள்ள நிறைவான தன்மைகளையெல்லாம் மறுத்து வீணாக்கிவிட்டு, அவனுக்குத் தகாத தன்மைகளையும் பிற உயிரற்ற திடப் பொருளுக்கு இருக்கின்ற தன்மைகளையும் வர்ணனைகளையும் அவனுக்கு உரித்தாக்குகின்றனர். இவர்களின் இது போன்ற தவறான கூற்றுக்களை விட்டும் அல்லாஹ் மிக மிக உயர்ந்து விட்டான்.

அல்லாஹ்வுக்குச் சில வர்ணனைகள் உண்டென்று கூறிச் சிலவற்றை மறுக்கின்ற அஷ்அரிய்யாக்கள் போன்றவர்களும் உண்மையான இஸ்லாத்திற்கு மாற்றமான கொள்கையினரில் அடங்குவர்.

ஒப்புவமை உண்டென எந்தப் பண்புகளை அல்லாஹ்வுக்கு மறுத்தார்களோ, அவர்கள் அல்லாஹ்வுக்கு நிறுவிய பண்புகளுள் அதை ஏற்க நிர்பந்திக்கப் பட்டனர். இதனால் அவர்களின் கூற்றுக்கு வரிந்து விளக்கம் கொடுத்து ஷரீஅத் மற்றும் அறிவு அடிப்படையான ஆதாரங்களுக்கு முரண்படுகின்றனர். இந்த விஷயத்தில் தங்களுக்குள்ளேயே தெளிவாக முரண்படுகின்றனர்.

அல்லாஹ் தனக்கென எந்தெந்தப் பெயர்களையும் வர்ணனைகளையும் உரித்தாக்கினானோ அவற்றை முழுமையாகவும், அவன் தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் என்னென்ன பெயர்களையும் வர்ணனைகளையும் அல்லாஹ்வுக்கு உரித்தாக்கினார்களோ அவற்றையும் முழுமையான முறையில் நம்பிச் செயல்படுபவர்களே உண்மையான சுன்னத்து வல் ஜமாஅத்தினர்.

அவனது படைப்பினங்களுக்கு அவனை ஒப்பாக்குவதை விட்டும் முழுமையாக அவனைத் தூய்மைப் படுத்துகின்றனர். அவனது பெயர்கள், தன்மைகளில் இருந்து எதையும்

வீணாக்காமலும், மாற்றாமலும் அனைத்து ஆதாரங்களையும் செயல்படுத்துகின்றனர். மற்றவர்கள் வீழ்ந்து கிடக்கும் முரண்பாடுகளை விட்டும் பாதுகாப்பு பெற்று விட்டனர். இதுபற்றி முன்னர் முழுமையாக விளக்கப்பட்டுள்ளது. இது தான் இம்மை – மறுமை வெற்றிக்கான பாதை இச்சமுதாயத்தின் இமாம்களும் சான்றோர்களான முன்னோர்களும் சென்ற "ஸிராத்தல் முஸ்த்தகீம்" என்ற நேரான பாதை. அத்தகைய முன்னோர்கள் எந்த வழியில் நடந்து சீரடைந்தார்களோ, அதில் சென்றாலே தவிரப் பின்னோர்கள் சீர்பெற முடியாது. அதுவே குர்ஆனையும் ஸுன்னாவையும் பின்பற்றி, அதற்கு மாற்றமான அனைத்தையும் விட்டு வாழ்கின்ற பாதையாகும்.

### *அல்லாஹ்வை மட்டுமே வணங்க வேண்டியதன் அவசியம்.*

பருவ வயதை அடைந்த முஸ்லிமின் மீதுள்ள கடமைகளுள் மிக முக்கியமானது, வானம் பூமிகளுக்கும் மகத்தான அர்ஷுக்கும் சொந்தக்காரனான அல்லாஹ்வை மட்டுமே வணங்குவதாகும். சங்கைக்குரிய தனது வேதத்தில் அல்லாஹ் கூறுகின்றான்.

நிச்சயமாக உங்கள் இறைவனாகிய அல்லாஹ்தான் ஆறு நாட்களில் வானங்களையும் பூமியையும் படைத்துப் பின் அர்ஷின் மீது அமைந்தான். அவனே இரவைக் கொண்டு பகலை மூடுகிறான். அவ்விரவு, பகலை வெகுவிரைவாகப் பின் தொடர்கிறது. இன்னும் சூரியனையும் சந்திரனையும் நட்சத்திரங்களையும் தன் கட்டளைக்குக் கீழ்ப் படிந்தவையாக(ப் படைத்தான்). படைப்பும் ஆட்சியும் அவனுக்கே சொந்தமல்லவா? அகிலங்களுக்கெல்லாம் இறைவனாகிய (அவற்றைப் படைத்துப் பரிபாலித்துப் பக்குவப் படுத்தும்) அல்லாஹ்வே மிகவும் பாக்கியமுடையவன்.

(அல்குர்ஆன் 7:54)

அல்குர்ஆனின் மற்றொரு வசனத்தில், அல்லாஹ் தன்னை வணங்குவதற்காகவே பூமிக்குப் பாரமான இரண்டு இனங்களைப் படைத்ததாகக் கூறுகின்றான்.

மனிதர்களையும் ஜின்களையும் என்னை வணங்குவதற்காவே அன்றி நான் படைக்கவில்லை.

(அல்குர்ஆன் 51:56)

தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ், குனிந்து ருகூவு செய்தல், பணிந்து சுஜூது செய்தல், கஃபாவை வலம்வருதல், அறுத்துப் பலியிடுதல், நேர்ச்சை செய்தல், பயப்படுதல், ஆதரவு வைத்தல், அபயம் தேடுதல், உதவி தேடுதல், பாதுகாப்பு கோரல், அவனிடமே இறைஞ்சுதல் போன்றவற்றால் அவனை ஒருமைப் படுத்துவதாகும். இவை அனைத்தையும் அல்லாஹ் ஒருவனுக்கே செய்ய வேண்டும். இதுவே ஏகத்துவம் இதற்காகவே தான் அல்லாஹ் மனிதனையும் ஜின் இனத்தையும் படைத்தான்.

கண்ணியமான அவனின் வேதமும், நம்பிக்கைக்குரிய அவனது தூதர் முஹம்மது (ஸல்) அவர்களின் வழிமுறையும் அறிவிக்கின்ற அனைத்து ஏவல் விலக்கல்களிலும் அல்லாஹ்வுக் கட்டுப்படுவதும் ஏகத்துவத்தில் அடங்கும்.

இந்த ஏகத்துவம் என்ற வணக்கத்தைக் கொண்டே மனிதனையும் ஜின் இனத்தையும் அல்லாஹ் கட்டளையிட்டான். இதற்காகத்தான் அவர்கள் படைக்கப்பட்டனர். இதற்காவே நபிமார்கள் அனைவரையும் அனுப்பினான். இந்த ஏகத்துவத்தை அழைப்பதற்காவும், அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே வணக்கம் செலுத்த வேண்டும் என்பதை ஏவுவதற்காகவும் வேதங்களை இறக்கினான்.

அல்லாஹ் கூறுகின்றான்:— மனிதர்களே! நீங்கள் உங்களையும் உங்களுக்கு முன்னிருந்தோரையும் படைத்த உங்கள் இறைவனையே வணங்குங்கள். (அதனால்) நீங்கள் இறையச்சமும் தூய்மையும் உடையோராகலாம்.

(அல்குர்ஆன் 2:21)

அவனையன்றி (வேறு எவரையும், எதையும்) நீர் வணங்கலாகாது என்றும், பெற்றோருக்கு நன்மை செய்யவேண்டும் என்றும் உம்முடைய இறைவன் விதித்திருக்கின்றான்.

(அல்குர்ஆன் 17:23)

இந்த வசனத்தில் "களா" என்ற வார்த்தைக்கு விதித்திருக்கின்றான், ஏவியிருக்கின்றான், உபதேசம் செய்கின்றான் என்று பொருளாகும்.

இன்னும் அல்லாஹ் கூறுகின்றான்; அல்லாஹ்வுக்கு வணக்கத்தைத் தூய்மையாக்கியவர்களாக (தவறான வழியிலிருந்து விலகிச் சரியான வழியில்) பிடிப்புள்ளவர்களாக அல்லாஹ்வை அவர்கள் வணங்கவேண்டும்; மேலும் தொழுகையை நிலை நாட்ட வேண்டும்; ஜகாத்தை வழங்க வேண்டும் என்பதைத் தவிர (வேறெதுவும்) அவர்களுக்குக் கட்டளையிடப்படவில்லை. இதுதான் நேரான மார்க்கமாகும்.

(அல்குர்ஆன் 98:5)

அல்குர்ஆனில் இதே கருத்தில் பல வசனங்கள் வந்துள்ளன. மேலும் (நம்) தூதர் உங்களுக்கு எதைக் கொடுக்கின்றாரோ, அதை எடுத்துக் கொள்ளுங்கள்; இன்னும் எதை விட்டு உங்களை விலக்குகின்றாரோ அதை விட்டு விலகிக் கொள்ளுங்கள். மேலும் அல்லாஹ்வை அஞ்சிக்

கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் வேதனை செய்வதில் மிகக் கடினமானவன்.

(அல்குர்ஆன் 59:7)

மேலும் அல்லாஹ் குறிப்பிடுகின்றான்:
நம்பிக்கை கொண்டவர்களே! அல்லாஹ்வுக்குக் கீழ்ப் படியுங்கள். இன்னும் அல்லாஹ்வின் தூதருக்கும், உங்களுள் (நேர்மையாக) அதிகாரம் வகிப்பவர்களுக்கும் கீழ்ப் படியுங்கள். உங்களுக்கிடையில் ஏதாவது ஒரு விஷயத்தில் பிணக்கு ஏற்படுமானால் – மெய்யாகவே நீங்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்புபவர்களாக இருப்பின் அதை அல்லாஹ்விடமும் (அவன் தூதரிடமும் ஒப்படைத்து விடுங்கள். இதுதான் உங்களுக்கு மிகவும் சிறப்பானதும் அழகான முடிவுமாகும்.

(அல்குர்ஆன் 4:59)

எவர் அல்லாஹ்வின் தூதருக்குக் கீழ்ப் படிகிறாரோ அவர் அல்லாஹ்வுக்குக் கீழ்ப் படிந்தவர் ஆவார்.

(அல்குர்ஆன் 4:80)

மெய்யாக நாம் ஒவ்வொரு சமூகத்தாரிடத்திலும், "அல்லாஹ்வையே நீங்கள் வணங்குங்கள்; ஷைத்தான்களை விட்டு விலகிச் செல்லுங்கள் என்று (உபதேசிக்குமாறு) நம் தூதர்களை அனுப்பி வைத்தோம்.

(அல்குர்ஆன் 16:36)

நபியே! உமக்கு முன்னர் நாம் அனுப்பிய தூதர் ஒவ்வொருவரிடமும், "நிச்சயமாக வணக்கத்திற்குரிய நாயன் என்னைத் தவிர வேறு எவருமில்லை; எனவே என்னையே நீங்கள் வணங்குங்கள்" என்று நாம் வஹீ அறிவிக்காமல் இல்லை. (21:25)

இது வேதம் ஆகும்; இதன் வசனங்கள் (பல்வேறு அத்தாட்சிகளால்) உறுதியாக்கப் பெற்றுப் பின்னர் தெளிவாக

விவரிக்கப் பெற்றுள்ளன. மேலும் இவை (யாவற்றையும்) நன்கு அறிபவனும் ஞானம் மிக்கோனுமாகிய (இறை)வனிடம் இருந்து வந்துள்ளன. நீங்கள் அல்லாஹ்வையன்றி (வேறு எதனையும்) வணங்காதீர்கள். நிச்சயமாக நான் உங்களுக்கு அச்சமூட்டி எச்சரிப்பவனாகவும், நன்மாராயம் கூறுபவனாகவும். அவனிடமிருந்து வந்துள்ளேன். (என்று நபியே நீர் கூறுவீராக)

(அல்குர்ஆன் 11:1, 2)

அல்லாஹ்வின் வேதத்தில் வந்துள்ள தெளிவான இந்த வசனங்களும் இதே கருத்தில் வந்துள்ள பிற வசனங்களும் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே வணக்கத்தைக் கலப்பற்றதாக ஆக்கவேண்டுமென அறிவிக்கின்றன. அதுவே மார்க்கத்தின் கலப்பற்ற தன்மையாகும். இந்த மார்க்கத்தின் அடித்தளமும் அஸ்திவாரமும் அதுதான். மனித ஜின் இனங்களைப் படைத்ததன் நோக்கமும், ரஸூல் மார்களைத் தூதர்களாக அனுப்பியதன் நோக்கமும் இதுவேதான் என அறியலாம்.

எனவே இவ்விஷயத்துக்கு முக்கியத்துவம் அளிப்பதும், இவ்விஷயத்தில் சிந்திப்பதும் பருவ வயதடைந்த ஒவ்வொருவரின் மீதும் கடமையாகும். மேலும் முஸ்லிம் என்று சொல்லிக் கொள்ளக் கூடியவர்களுள் பெரும்பான்மையினர், நபிமார்கள், ஸாலிஹீன்களான நல்லடியார்களின் கபுறுகளின் மீது கட்டடம் எழுப்புகின்றனர்; அதனைத் தொழும் இடமாக ஆக்கிக் கொள்கின்றனர்; அதன் மீது மண்டபம் எழுப்புகின்றனர்; இறந்து விட்ட நல்லடியார்களிடம் தமது தேவைகளைக் கேட்கின்றனர்; அவர்களிடம் இரட்சிப்புத் தேடுகின்றனர்; பாதுகாப்புத் தேடுகின்றனர்; தமது தேவைகள் நிறைவேற, கஷ்டங்கள் அகல, நோய் நீங்க, பகைவர்கள் மீது வெற்றி கிட்ட வேண்டுகின்றனர். இன்றும் இது

போன்ற இறைவனுக்கு இணை வைக்கின்ற பல செயல்களைச் செய்கின்றனர். அவர்கள் வீழ்ந்து கிடக்கின்ற இத்தீமைகளை விட்டு அவர்களைத் தடுப்பதும் எச்சரிப்பதும் ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கடமை ஆகும்.

நபி(ஸல்) அவர்கள் கூறியதும் அல்லாஹ்வின் வேதத்துக்கு ஒப்ப அமைந்துள்ளது. அதாவது, முஆத்(ரழி) அறிவிக்கிறார்கள். நபி(ஸல்) அவர்கள், "அடியார்களுக்கு அல்லாஹ் செய்ய வேண்டியது என்ன? அதுபோல அடியார்கள் அல்லாஹ்வுக்குச் செய்யவேண்டிய கடமைகள் யாவை எனக் கேட்டார்கள். அதற்கு முஆத்(ரழி) அவர்கள், "அல்லாஹ்வும் அவனது தூதரும் தான் அறிந்தவர்கள்" எனக் கூறிய போது நபி(ஸல்) அவர்கள், "அடியார்கள் அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய கடமை அவனை மட்டுமே வணங்குவதும், எதையும் அவனுக்கு இணை ஆக்காதிருப்பதும் ஆகும். அடியார்களுக்கு அல்லாஹ் செய்ய வேண்டியது, அவனுக்கு எந்த ஒன்றையும் இணையாக்காமல் நடந்து கொண்டவர்களைத் தண்டிக்காமல் இருப்பதாகும் என விளக்கினார்கள். இது புகாரி முஸ்லிமில் பதிவாகியுள்ளது.

"அல்லாஹ்வுக்கு இணை கற்பித்து, அதே நிலையில் யாராவது இறந்திருந்தால், அவர் நரகில் நுழைவார்' எனவும் நபி(ஸல்) அவர்கள் கூறியதாக இப்னுமஸ்ஊது(ரழி) அறிவிக்கும் ஹதீஸ் புகாரியில் பதிவாகியுள்ளது.

"அல்லாஹ்வுக்கு எதையும் இணை வைக்காமல் அல்லாஹ்வை எவன் சந்திக்கிறானோ, அவன் சுவனத்தில் நுழைந்து விட்டான். எதையாவது அவனுக்கு இணைவைத்து, அவனைச் சந்திப்பவன் நரகில் நுழைந்து விட்டான்" என நபி(ஸல்) அவர்கள் கூறியதாக ஜாபிர்(ரழி) அறிவிக்கும் ஹதீஸ் முஸ்லிமில் பதிவாகியுள்ளது. இந்தக்

கருத்தில் பல ஹதீஸ்கள் வந்துள்ளன. இந்த விஷயம் மிகமிக முக்கியமானதும் உயர்ந்ததும் ஆகும்.

ஏகத்துவத்தின் பக்கம் மக்களை அழைக்கவும், இணைவைத்தலை விட்டுத் தடுக்கவும் தான் தனது நபி முஹம்மது(ஸல்) அவர்களை அல்லாஹ் அனுப்பினான். அல்லாஹ் தன்னை எதற்காக அனுப்பினானோ, அதை நபி(ஸல்) அவர்கள் முழுமையாகவும் சிறப்பாகவும் நிறைவேற்றினார்கள். அல்லாஹ்வின் பாதையில் கடுமையான முறையில் துன்பப்படுத்தப்பட்டார்கள். ஆனால், அவர்களும் அவர்களது அருமைத் தோழர்களும் இந்த ஏகத்துவ அழைப்பின் போது பட்ட துன்பங்களில் பொறுமையை மேற் கொண்டனர். முடிவில் இந்த அரபுத் தீப கற்பத்திலிருந்து எல்லாச் சிலைகளையும், வணங்கப்பட்ட ஜடப் பொருட்களையும் அல்லாஹ் அகற்றினான். மக்கள் அல்லாஹ்வின் மார்க்கத்தில் கூட்டம் கூட்டமாக நுழைந்தனர். கஃபாவின் உள்ளேயும் வெளியேயும் அதனைச் சுற்றிலும் இருந்த சிலைகள் உடைக்கப்பட்டன. லாத், உஸ்ஸா, மனாத் ஆகிய விக்ரஹங்களும் அழிக்கப்பட்டன. அரபுக் கோத்திரத்தாரின் எல்லாச் சிலைகளும் உடைத்து நொறுக்கப்பட்டன. அல்லாஹ்வின் கலிமா உயர்ந்தோங்கியது.

அரபுத் தீப கற்பத்தில் இஸ்லாம் பரவிற்று. பின்னர் அதற்கு வெளியிலும், இஸ்லாமிய அழைப்புப் பணி, மற்றும் அறப் போர்களில் முஸ்லீம்கள் ஈடுபட்டனர். எனவே அடியார்களிலிருந்து யாருக்கு ஈடேற்றம் முந்திக் கிடைத்ததோ, அவர்களுக்கு இவர்கள் மூலம் அல்லாஹ் நேர்வழி காட்டினான். இவர்கள் மூலம், பெரும்பான்மையான பகுதிகளில் உண்மையையும் நேர்மையையும் அல்லாஹ் பரவச் செய்தான். இதனால் அவர்கள் நேர்வழி காட்டும் தலைவர்களாகவும், உண்மையின் பக்கம் வழி நடாத்திச்

செல்பவர்களாகவும், நேர்மையான இஸ்லாமிய அழைப்பாளர்களாவும், சீர்திருத்தம் செய்பவர்களாகவும் ஆனார்கள்.

தாபியீன்களும், அவர்களைப் பின்பற்றிய நேர்வழி நடந்த இமாம்களும் மற்றும் இஸ்லாமிய அழைப்பாளர்களும் அவர்களது வழியைப் பின்பற்றி அல்லாஹ்வின் மார்க்கத்தைப் பரப்பினார்கள். தவ்ஹீது எனும் ஏகத்துவத்தின் பக்கம் மக்களை அழைத்தனர். தங்களது உடலாலும் பொருளாலும் "ஜிஹாது எனும் அறப்போர் புரிந்தனர். பழிப்போரின் பழிச் சொல்லுக்கு அவர்கள் அஞ்சவில்லை. எனவே அவர்களை அல்லாஹ் உறுதிப்படுத்தினான்; அவர்களுக்கு உதவிகள் புரிந்தான்; அவர்களுள் சிறந்தவர்களை விட அவர்களை உயர்வாக்கினான்.

"ஈமான் கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு உதவி செய்தால், அவன் உங்களுக்கு உதவி செய்து, உங்கள் பாதங்களை உறுதியாக்கி வைப்பான்"

(அல்குர்ஆன் 47:7)

அல்லாஹ்வுக்கு எவன் உதவி செய்கிறானோ, அவனுக்குத் திடனாக அல்லாஹ்வும் உதவி செய்வான். நிச்சயமாக அல்லாஹ் வலிமை மிக்கோனும் (யாவரையும்) மிகைத்தோறுமாக இருக்கின்றான். அன்றியும் இவர்கள் (எத்தகையோரென்றால்) இவர்களுக்கு நாம் பூமியில் வாய்ப்புண்டாக்கிக் கொடுத்தால், இவர்கள் தொழுகையை முறையாகக் கடைப்பிடித்து ஜகாத்தும் கொடுப்பார்கள். நன்மையான காரியங்களைச் செய்யத் தூண்டி தீமையை விட்டும் விலக்குவார்கள். மேலும் அனைத்து நடவடிக்கைகளின் முடிவும் அல்லாஹ்விடமே இருக்கிறது.

(அல்குர்ஆன் 22:40, 41) என்ற அல்லாஹ்வின் திரு வசனங்களில் கூறப்பட்டது போல, அவர்களுக்கு எதை வாக்களித்தானோ அதை நிறைவேற்றி வைத்தான்.

இதன் பின்னர், மக்கள் மாறுபட்டுப் பல பிரிவுகளாகப் பிரிந்தனர்; அறப் போரில் ஈடுபடுவதை விட்டுச் சோம்பேறிகளாயினர்; சுக வாழ்வை விரும்பினர்; மன இச்சைகளைப் பின்பற்ற ஆரம்பித்தனர்; அல்லாஹ் யாரைப் பாதுகாத்தானோ, அவர்கள் தவிர மற்றவர்களிடம் வெறுக்கத் தக்க செயல்கள் தோன்றின. எனவே அவர்களை அல்லாஹ் மாற்றினான். அவர்கள் செய்த செயல்களுக்காக அவர்கள் மீது எதிரிகளை அல்லாஹ் சாட்டினான். அல்லாஹ் தனது அடியார்களுக்கு அநீதம் இழைப்பவன் அல்லன். அல்லாஹ் கூறுகின்றான். எந்த ஒரு சமுதாயத்தவரும் தம் நிலையைத் தாமே மாற்றிக் கொள்ளாத வரையில் அல்லாஹ் அவர்களை நிச்சயமாக மாற்றுவதில்லை.

(அல்குர்ஆன் 13:11)

அரசாங்கம், கேந்திரங்கள் மற்றும் முஸ்லீம்கள் அனைவரும் அல்லாஹ்வின் பக்கம் மீளுவது கடமை ஆகும். அவனுக்கு மட்டுமே முழுமையாக வணக்க வழிபாடுகளை உரித்தாக்குவதும் அவர்களில் நிகழ்ந்துவிட்ட குறைகள் பாவங்களுக்காக அவனிடம் பாவமன்னிப்பு வேண்டுவதும் கடமைகளாக எதை அல்லாஹ் கட்டாயம் செய்ய வேண்டியவனாக ஆக்கியிருக்கிறானோ, அவற்றை நிறைவேற்ற விரைவதும், அவர்களுக்கு எதை ஹராம் ஆக்கினானோ அவற்றை விட்டுத் தூரமாவதும் இதில் அவர்கள் தங்களுக்கு மத்தியில் உபதேசம் செய்வதும், ஒருவருக்கொருவர் உதவிக் கொள்வதும் கட்டாயக் கடமை ஆகும்.

இவற்றுள் எல்லாம் மிக முக்கியமானது ஷரீஅத்தின் தண்டனைச் சட்டங்களை ஒழுங்காக நிறைவேற்றுவதும் எல்லா

விஷயங்களிலும் மக்களுக்கு மத்தியில் ஷரீஅத் சட்டத்தை வைத்தே தீர்ப்பளித்தலும் வேண்டும். அல்லாஹ்வின் ஷரீஅத் சட்டத்திற்கு முரணான, மக்களால் உருவாக்கப்பட்ட சட்டங்களைக் கைவிட்டு விடவேண்டும். இது போலவே மார்க்கச் சட்ட திட்டங்களை விளக்குவது, மக்களுக்கு மத்தியில் இஸ்லாமியப் பிரச்சாரத்தை முடுக்குவது மார்க்க அறிஞர்கள் மீது கடமை உண்மையைக் கொண்டும், பொறுமையைக் கொண்டும் உபதேசிப்பதும் நல்லனவற்றை ஏவுவதும், தீயதைத் தடுப்பதும் இதன்படி நடக்க ஆட்சியாளர்களைத் தூண்டுவதும் மார்க்க அறிஞர்கள் மீது கடமை.

இது போன்றே கம்யூனிஸம், இனவாதம் மற்றும் இன்னபிற புதிய கொள்கைகளையும் ஷரீஅத் சட்டத்திற்கு மாற்றமான கோட்பாடுகளையும் எதிர்த்துப் போராடுவதும் இதன் மூலம் அல்லாஹ் முஸ்லீம்களின் சீர்கெட்ட நிலையை சீர்படுத்துவான்; அவர்களை ஒருங்கிணைத்து முன்னோர்கள் பெற்றிருந்த சிறப்பை மீளவும் அளிப்பான்; எதிரிகளை வெற்றி கொள்ள உதவுவான்; உலகில் முஸ்லீம்களின் நிலையை உறுதிப்படுத்துவான்.

முஃமின்களுக்கு உதவி புரிதல் நம்மீது கடமை ஆகும் (30:47) என்றும் "உங்களுள் எவர் ஈமான் கொண்டு நற்செயல்கள் புரிகின்றார்களோ அவர்களை, அவர்களுக்கு முன்னிருந்தோரை(ப் பூமிக்கு) ஆட்சியாளர்களாக்கியது போல், நிச்சயமாக பூமிக்கு ஆட்சியாளர்களாக்கி வைப்பதாகவும், இன்னும் அவன் அவர்களுக்காகப் பொருந்திக் கொண்ட மார்க்கத்தில் அவர்களை நிலைப்படுத்துவதாகவும், அவர்களுடைய அச்சத்தைத் திட்டமாக அமைதியைக் கொண்டு மாற்றி விடுவதாகவும் அல்லாஹ் வாக்களித்திருக்கிறான். அவர்கள் என்னோடு (எதையும், எவரையும்) இணை வைக்காது என்னையே வணங்குவார்கள். இதன் பின்னர் (உங்களில்) எவர் மாறு செய்கின்றார்களோ அவர்கள் பாவிகளே

(24:55) என்றும் அல்லாஹ் கூறுகின்றான். இன்னும் நிச்சயமாக, நாம் நம்முடைய தூதர்களுக்கும் ஈமான் கொண்டவர்களுக்கும் இவ்வுலக வாழ்க்கையிலும் சாட்சிகள் நிலைபெறும் நாளிலும் உதவி செய்வோம். அந்நாளில் அநியாயக்காரர்களுக்கு அவர்கள் புகழ் கூறுதல் பயனளிக்காது. அவர்களுக்குச் சாபமும் உண்டு. தீய இருப்பிடமும் அவர்களுக்கு உண்டு. (40:51,52) என்றும் அல்லாஹ் கூறுவது போல அவர்களை இப்பூமியில் உறுதியாக நிலைப்படுத்துவான்.

முஸ்லீம் வழிகாட்டிகளும், பொதுமக்களும் சீர்திருந்தி, மார்க்க விளக்கத்தை அல்லாஹ் அவர்களுக்கு வழங்கவும் இறையச்சத்தின் அடிப்படையில் ஒன்றிணையவும், அவர்கள் அனைவரும் நேரான பாதையில் வழி நடக்கவும் உண்மைக்கு உதவுபவர்களாகவும், தீமையைத் தடுப்போராகவும் இறையச்சத்தின் மீதும் நல்ல காரியங்களுக்கும் உதவி செய்வோராகவும், உண்மையைக் கொண்டும் பொறுமையைக் கொண்டும் உபதேசிப்பவர்களாகவும் ஆக்க அல்லாஹ் போதுமானவன். இவற்றிற்கெல்லாம் அவனே பொறுப்பாளன்; சக்தியுடையவன்.

அவனது அடியாரும் தூதரும் அவனது படைப்பினங்களுள் சிறந்தவருமான எங்கள் நபியும் எங்கள் வழிகாட்டியும் தலைவருமான முஹம்மது பின் அப்துல்லாஹ்(ஸல்) அவர்களுக்கு தோழர்களுக்கும் அவர்களது வழியைப் பின்பற்றியவர்களுக்கும் அருள் புரிவானாக.

## *இஸ்லாத்தை விட்டு வெளியேற்றும் செயல்கள்.*

இஸ்லாமிய சகோதரனே! அறிந்துகொள்!! அடியார்கள் அனைவரும் இஸ்லாத்தில் நுழைந்து அதன் சட்ட திட்டங்களைப் பற்றிப் பிடிப்பதை அல்லாஹ் கடமை ஆக்கி இருக்கிறான். அதற்கு மாற்றமான அனைத்தையும் விட்டு விலகிக் கொள்வதையும் எச்சரித்து

இருக்கிறான். இந்த இஸ்லாத்தின் பக்கம் அழைக்கவே முஹம்மது (ஸல்) அவர்களை அனுப்பினான். அவர்களைப் பின்பற்றியவர்களை நேர்வழி பெற்றவர்களாகவும் பின்பற்றாமல் புறக்கணித்தவர்கள் வழிகெட்டு விட்டவர்களாவும் அல்லாஹ் அறிவித்திருக்கின்றான்.

இஸ்லாத்திலிருந்து மதம் மாறி விடுவது பற்றியும் மற்றும் இணை வைத்தல், இறை நிராகரிப்பு போன்றவற்றின் காரணங்களைப் பல திருவசனங்களில் எச்சரித்திருக்கிறான்.

இஸ்லாத்திலிருந்து மதம்மாறி விடுவது பற்றியும் மற்றும் இணைவைத்தல், இறை நிராகரிப்பு போன்றவற்றின் காரணங்களைப் பல திருவசனங்களில் எச்சரித்திருக்கிறான்.

ஒரு முஸ்லிம், இஸ்லாத்திற்கு முரணான பல காரணங்களால் தீனை விட்டு மதம் மாறியவனாகக் கருதப்படுவான். அவன் இஸ்லாத்தை விட்டு வெளியேறிவிடுவதால், அவனது உடல் பொருளுக்கு இஸ்லாம் உத்தரவாதம் அளிக்காது. இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றுகின்ற காரணங்களுள் மிகத் தீயதும் பயங்கரமானதுமான பத்து காரியங்களை மார்க்க அறிஞர்கள் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாபும் மற்றைய மார்க்க அறிஞர்களும் இவ்வாறு கூறியுள்ளனர். அவற்றிலிருந்து நீங்களும் விலகி, மற்றவர்களையும் விலக்கி, பாதுகாப்புப் பெறுவதற்காகச் சுருக்கமாக அவை பற்றிச் சிறிய விளக்கங்களை உங்களுக்குச் சமர்பிக்கின்றோம்.

முதலாவது: அல்லாஹ்வின் வணக்க வழிபாடுகளில் அவனுக்கு இணைவைப்பது. அல்லாஹ் குறிப்பிடுகின்றான்: நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணை வைப்பதை மன்னிக்க மாட்டான்; இதைத் தவிர (மற்ற) எதையும் தான் நாடியவர்களுக்கு மன்னிப்பான்.

(அல்குர்ஆன் 4:48, 116)

எவனொருவன் அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பானோ அவனுக்கு அல்லாஹ் சுவனபதியை நிச்சயமாக ஹராமாக்கி விட்டான். மேலும் அவன் ஒதுங்குமிடம் நரகமேயாகும். அக்கிரமக்காரர்களுக்கு உதவிபுரிபவர் எவருமில்லை.

(அல்குர்ஆன் 5:72)

இறந்தவர்களிடம் துஆக் கேட்பதும், அவர்களிடம் பாதுகாப்புத் தேடுவதும் அவர்களுக்காக அறுத்துப் பலியிடுதலும் அவர்களுக்காக நேர்ச்சை செய்வதும் இந்த வகையைச் சார்ந்ததுதான்.

இரண்டாவது:– தனக்கும் அல்லாஹ்வுக்கும் மத்தியில் ஒருவரை இடைத்தரகராக ஏற்படுத்தி அவர்களை அழைத்து சிபாரிசு செய்யக் கோருவதும் அவர்களிடத்தில் முழு நம்பிக்கை வைப்பதும் ஆகியவை இறைநிராகரிப்பு என்பது ஏகோபித்த கருத்தாகும்.

மூன்றாவது:– அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பவர்களைக் காஃபிர்கள் என யார் கருதவில்லையோ அவர்களும், அவர்கள் காஃபிர்கள் என்பதில் சந்தேகம் கொள்வோரும், அவர்கள் கொள்கை வழிமுறைகளைச் சரியானது என்று கருதுவோரும் அந்நிராகரிப்பில் பங்கு பெறுகிறார்கள்.

நான்காவது:– ரஸூல்(ஸல்) அவர்களுடைய வழிமுறைகளை விட மற்றவர்களின் வழிமுறைகள் பூரணமானவை என்று நம்புவது அல்லது கொடுங்கோலர்களுடைய தீர்ப்பை ரஸூல்(ஸல்) அவர்கள் தீர்ப்பைவிடச் சிறந்தது எனக் கருதி மற்றவர்களுடைய தீர்ப்பை நபி(ஸல்) அவர்கள் தீர்ப்பை விடச் சிறந்தது என்று யார் நம்புகிறார்களோ அவர்கள் இறைநிராகரிப்பாளர் (காஃபிர்) ஆகிவிடுகின்றனர்.

ஐந்தாவது:— ரஸுல்(ஸல்) அவர்கள் கொண்டு வந்த ஷரீஅத்தில் எதையோனும் வெறுப்பதும் அவை இறை நிராகரிப்பாளனாக்கி விடும். அச்செயலை அவன் எடுத்து நடந்தாலும் சரியே. ஏனெனில், அல்லாஹ் கூறுகின்றான்; அல்லாஹ் இறக்கி வைத்ததை மெய்யாகவே அவர்கள் வெறுத்து (நிராகரித்து) விட்டார்கள். ஆகவே அவர்களுடைய செயல்களை அவன் பயனற்றவையாக ஆக்கிவிட்டான்.

(அல்குர்ஆன் 47:9)

ஆறாவது: ரஸுல்(ஸல்) அவர்கள் கொண்டு வந்த மார்க்கத்தில் எதையாவது கேலி செய்பவனும், அல்லது அம்மார்க்கம் கூறும் பிரதிபலனையோ தண்டனையோ கேலி செய்பவனும் காஃபிராகி விடுகிறான். ஏனெனில், அல்லாஹ் கூறுகின்றான்: 'அல்லாஹ்வையும் அவன் வசனங்களையும், அவன் தூதரையுமா நீங்கள் பரிகசித்துக் கொண்டிருந்தீர்கள்? என்று (நபியே!) நீர் கேட்பீராக! நீங்கள் (செய்யும் விஷமத்தனமான பரிகாசத்திற்கு வீண்) புகழ் கூற வேண்டாம். நீங்கள் நம்பிக்கை கொண்ட பின் நிச்சயமாக நிராகரிப்போராய் விட்டீர்கள்.

(அல்குர்ஆன் 9:65, 66)

ஏழாவது:— சூனியம் செய்தல், 1. வேண்டாத வெறுப்புண்டாக்குதல் (அதாவது தன் மனைவி மீது பாசமும் ஆசையும் உடைய ஒருவனை அவள் மீது கோபமுடையவனாக மாற்றுதல்). 2. தகாத ஆசையூட்டுதல் (அதாவது ஒன்றின் மீது ஆசையற்ற மனிதனை ஷைத்தானுடைய வேலையினால் ஆசைப்பட வைத்தல்) போன்ற செயல்களும் சூனியத்தின் பாற்பட்டவையே இவ்வாறு செய்வோர் மற்றும் இவ்வாறு செய்வதை விரும்பக் கூடியவர்களும் காஃபிராகி விடுகின்றனர். ஏனெனில் அல்லாஹ் கூறுகின்றான்; (அவர்களிடம் சூனியத்தைக் கற்க வருபவர்களை நோக்கி) "நாங்கள் சோதனையாக இருக்கிறோம். (இதைக் கற்று) நீங்கள் இறை நிராகரிப்புச் செய்யும் காஃபிராகி விடாதீர்கள்" என்று சொல்லி எச்சரிக்காத வரையில் எவருக்கும்

(ஹாரூத், மாரூத் என்ற வானவர்கள்) இந்த சூனியத்தைக் கற்றுக் கொடுக்கவில்லை.

(அல்குர்ஆன் 2:103)

எட்டாவது: முஸ்லீம்களுக்கு எதிராக இணைவைப்பவர்களுடன் சேர்ந்து துணை புரிவது. இது பற்றி அல்லாஹ் குறிப்பிடுகிறான்: உங்களில் எவரும் (யூதர்களையும் கிறித்தவர்களையும்) தமக்குப் பாதுகாவலராக்கிக் கொண்டால் நிச்சயமாக அமரும் அவர்களைச் சேர்ந்தவர் தான். நிச்சயமாக அல்லாஹ் அநியாயக் கார மக்களுக்கு நேர்வழி காட்ட மாட்டான்

(அல்குர்ஆன் 5:51)

ஒன்பதாவது: முஹம்மது(ஸல்) அவர்களின் ஷரீஅத்தை விட்டு வெளியேறுவது சிலருக்கு கூடும் என நம்பக் கூடியவனும் காஃபிறாகி விடுகின்றான். ஏனெனில், அல்லாஹ் கூறுகின்றான்; இஸ்லாம் அல்லாத (வேறு) மார்க்கத்தை எவரேனும் விரும்பினால், (அது) ஒரு போதும் அவரிடமிருந்து ஒப்புக் கொள்ளப்பட மாட்டாது. மேலும் அத்தகையவர் மறுமை நாளில் நஷ்டமடைந்தோரில் தான் இருப்பார்.

(அல்குர்ஆன் 3:85)

பத்தாவது: அல்லாஹ்வின் மார்க்கமான இஸ்லாத்தைக் கற்றறிய முற்படாமலும், அதன்படிச் செயல்படாமலும், அம் மார்க்கத்தைப் புறக்கணித்து மறுத்தல் இது பற்றி அல்லாஹ் கூறுகின்றான்: எவன் தன்னுடைய இறைவனின் வசனங்களால் நினைவூட்டப் பெற்ற பின்னரும் அவற்றைப் புறக்கணித்து வருகின்றானோ அவனை விட அநியாயக்காரன் எவன் இருக்கிறான்? நிச்சயமாக, நாம் (இத்தகைய) குற்றவாளிகளைத் தண்டிப்போம்.

(அல்குர்ஆன் 32:22)

இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றுகின்ற இக்காரியங்களைப் பிடிவாதமாகச் செய்யக் கூடியவனுக்கும் இலேசாக மதித்துச் செய்யக் கூடியவனுக்கும், பயந்து பயந்து செய்யக் கூடியவனுக்குமிடையில் எவ்வித வேறுபாடும் இல்லை. வற்புறுத்தப்பட்டுச் செய்யக் கூடியவன் மட்டும் விதி விலக்குப் பெறுகின்றான்.

இவை அனைத்தும் தீமையை விளைவிக்கும் பயங்கரமான காரியங்களும் மனிதர்கள் அதிகமாக விழுந்து விடும் தவறுகளும் ஆகும். எனவே, ஒரு முஸ்லிம் இவற்றை அஞ்சி, இவற்றை விட்டுப் பிறரை எச்சரிப்பது அவசியமாகும்.

மேற்சொன்ன நான்காவது வகையைச் சற்று விரிவாகக் காண்போம்:

மனிதர்களால் இயற்றப்பட்ட சட்டங்களும் விதி முறைகளும் இஸ்லாமிய ஷரீஅத்தை விடச் சிறந்தது என நம்புவதும், இஸ்லாமியச் சட்ட திட்டங்களை இந்த இருபதாம் நூற்றாண்டில் செயல்படுத்துவது பொருத்தமானதன்று எனக் கருதி, முஸ்லீம்கள் (அனைத்துத் துறைகளிலும்) பின் தங்க இஸ்லாமே காரணம் என்று கூறுவதும் மிகவும் மோசமான கொள்கையாகும்.

இன்னும், இஸ்லாம் என்பது ஒரு தனி மனிதனுக்கும் அவன் இறைவனுக்குமிடையிலுள்ள தொடர்பு மட்டுமே. ஏனைய வாழ்க்கைத் துறைகளில் அதற்குச் சம்பந்தமில்லை எனக் கூறுவது; களவாடியவனின் கையை வெட்டி திருமணமான விபச்சாரியைக் கல்லால் அடித்து, அல்லாஹ்வின் சட்டத்தை நிலை நாட்டுவது தற்காலத்துக்குப் பொருந்தாது எனக் கருதுவது; ஷரீஅத்தின் நடைமுறைகளிலும் தண்டனைச் சட்டங்களிலும் அல்லாஹ் அல்லாதவர்களுடைய தீர்ப்பை வழங்குவது கூடும் என நம்புவது,

மோசமான கொள்கையே அச்சட்டம் அல்லாஹ்வின் சட்டத்தை விட சிறந்தது என அவன் நம்பாவிட்டாலும் கூட, மற்றவர்களின் தீர்ப்புப் படி நியாயம் வழங்குவது கூடும் எனக் கூறும்போது, ஏகோபித்த முடிவின் படி, அல்லாஹ் தடுத்தவற்றை ஆகுமாக்குகின்றான். விபச்சாரம், மது அருந்துதல், வட்டி வாங்கல், அல்லாஹ் அல்லாதரின் சட்டத்தின்படித் தீர்ப்பு வழங்குதல் போன்றவை விலக்கப்பட்டவையாகும் என்பது எல்லோரும் அறிந்த ஒன்றாகும். இவற்றை யார் ஆகுமாக்கி விடுகின்றார்களோ, அவர்கள் முஸ்லிம்களின் ஏகோபித்த முடிவின் படி, காஃபிராகி விடுகின்றார்கள்.

அல்லாஹ்வுக்குக் கோபத்தை ஏற்படுத்துகின்ற செயல்களை விட்டும், அவனது கொடிய வேதனைகளை விட்டும் அவனிடம் பாதுகாப்புத் தேடுகின்றோம், அவனது படைப்பினங்களிலேயே சிறந்தவர்களாகிய முஹம்மது (ஸல்) அவர்களுக்கும், அவர்களின் கிளையினர் தோழர்களின் மீதும் அல்லாஹ் அருள் புரிந்து கிருபை செய்வானாக.

### *பின்வரும் நூல்களைப் படிக்கவும்:*

1. ஃபத்ஹுல் மஜீது – (கிதாபுத் தவ்ஹீதின் விரிவுரை).
2. அத்காருன்னவழி.
3. ரியாலுஸ் ஸாலிஹீன்.
4. அல் அகீததுல் வாஸிதிய்யா.
5. கஷ்ஃபுஷ் ஷுபுஹாத்.
6. அல் உஸூலுல் ஸலாததா.
7. தப்ஸீர் இப்னு கதீர்.
8. கிதாபுத் தவ்ஹீது.
9. அஸ்ஸுனனு வல் முப்ததீ ஆத்.
10. அல் இப்தாஃ ஃபீமழாரில் இப் திதாஃ

11. ஸாதுல் மஆத் ஃபீஹதிய்யி கைரில் இபாத்.

12. இகாஸதுல் லஹ்பான் மின் மஸாயிதிஸ் ஷைத்தான்.

13. இக்திழாவு ஸிராதல் முஸ்தகீம் ஃபீமுகாலபதி அஸ்ஹாபில் ஜஹீம்.